# காங்கிரசின் புதிய சதி!

# கம்யூனிஸ்ட் எதிர்ப்பு திரை மறைவில்

## ஜனநாயகப் படுகொலைக்கு முயற்சி


# தீக்கதிர்

கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) வார ஏடு

கதிர் 5 | 17 - 12 - 67 | 20 காசுகள் | மலர் 13


**• நாட்டை அமெரிக்காவுக்கு அடகு வைத்து வரும் ஒரு கூட்டம் கம்யூனிஸ்ட் கட்சியை (மார்க்சிஸ்ட்) தேசத் துரோகிகளென்று கூறுகிறது!**

**• விலைவாசிகளை உயர்த்தி மக்களைக் கொள்ளையடித்து வரும் அந்த கும்பல் மக்களுக்காக சேவைசெய்து வரும் கட்சியை சட்ட விரோதமாக்க வேண்டுமென்கிறது.**

**• யதேச்சாதிகார ஆட்சியையும் போலீசையும் துப்பாக்கியையும் பாதுகாப்புச் சட்டங்களையும் வைத்து காலந் தள்ளிவரும்இக்கோஷ்டி--"ஜனநாயகம்"பேசுகிறது! மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரிகள் சட்டமன்ற பாராளுமன்ற உறுப்பினர்கள் கொண்ட எங்கள் கட்சியை சட்ட விரோதமாக்க வேண்டும் என்கிறது. இத்தகை, மக்கள் விரோதக்கும்பலை பற்றி இனி மக்கள் தான் தீர்ப்பு கூற வேண்டும், மக்கள்தான் இந்தச் சதியை முறியடிக்க வேண்டும் !**

இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியை சட்ட விரோதமாக்க வேண்டுமென்றும், அதை அடக்குமுறை மூலம் முடமாக்க வேண்டுமென்றும் ஒருசில "பிரமுகர்களும்" ஒரு சில அரசியல் கட்சிகளும், ஒரு சில பத்திரிகைகளும் விடாது அண்மையில் பிரசாரம் செய்து வருகின்றனர்.

பம்பாயிலிருந்து வெளிவரும் இந்தியப் பெரு முதமுதலாளிகளின் பத்திரிகை "எகனமிக் டைம்ஸ்" இரு தினங்களுக்கு முன் நமது கட்சியைத் நடை செய்ய வேண்டுமென்று பலமாக வற்புறுத்தி எழுதியிருக்கிறது.

சென்னையிலிருந்துவரும் ஆங்கிலஏடான'மெயில்'பத்திரிகை முதல் பக்கத்தில் தாங்கி வந்த கேலிச் சித்திரத்தில்—கொலை, கொள்ளை, தீ வைத்தல், ஆயுதம் சேகரித்தல், அன்னியப் பண உதவி, தேசத் துரோகம், முதலிய கோஷங்களுடன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகள் ஒரு வளையமாகப் பேய்க் கூத்தாடி வருவது போலவும், வளையத்தின் மத்தியில் இந்திரா காந்தியும், மொரார்ஜி தேசாயும், சவாணும் கண்மூடி, செவிமூடி, வாய்மூடி, மௌனிகளாய் ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் கம்யூனிஸ்டுகளால் ஏற்பட்டுள்ள அபாயத்தை உணராது சும்மா உட்கார்ந்திருப்பது போலவும் வரையப் பட்டிருக்கிறது.

"ஹிந்து" பத்திரிகை நாள் தவருமல் இதே வேலையை விடாது கட்டுரைகளிலும் தலையங்கங்களிலும் செய்து வருவதை நாடு அறியும். நமது மாநிலத்தின் மற்ருெரு ஆங்கில ஏடான 'இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகையும் இந்தப் பேயாட்டத்தில் பின்தங்கி விடவில்லை. தமிழில் வெளிவரும் காங்கிரஸ் அல்லது சுதந்திரா கட்சிகளின் ஏடுகளான, "தினமணி", "நவசக்தி" "கல்கி" "ஆனந்த விகடன்" போன்றவை, ஆங்கில ஏடுகளையும் மிஞ்சி நமது கட்சியின் மீது விஷம் கக்கி வருவதைப் பார்க்கலாம்.

"சுதந்திரா கட்சி" அதிகாரபூர்வமாக ஒரு தீர்மானமே போட்டு கம்யூனிஸ்டு கட்சியைத் தடைசெய்ய வேண்டுமென்று கேட்டுள்ளது. அதன் தலைவர் ராஜாஜி கம்யூனிஸ்ட் எதிர்ப்பின் ஈட்டி முனையாகத் திகழ அரும்பாடுபட்டு வருகிருர். "ஜன சங்" கட்சியும் அதன் பிரமுகர் பால்ராஜ் மோதக்கும் வெறித்தனமாக நமது கட்சியை விடாது தாக்கி வருகின்றனர்.

### பகிரங்க அறிவிப்பு

காங்கிரஸ் மத்திய அமைச்சர்கள் இதே விருப்பம் கொண்டிருக்கிருர்களென்பதை நாடறியும். தாக்குவதற்கு சமயம் பார்த்துக் கொண்டிருக்கிருர்களென்றுதான் அவர்களைப்பற்றிக் கூற முடியும். மேற்கு வங்கத்தில் முன்னுள் முதலமைச்சர் அஜய் முகர்ஜியை தனியாக டெல்லிக்கு அழைத்து ஐக்கிய முன்னணி அரசைக் கவிழ்க்க அவர்கள் சதி செய்தார்களென்று அஜய் முகர்ஜியே விவரம் வெளியிட்ட ஒரு உதாரணம் போதாதா? இப்போது மத்திய சர்க்காரின் உள்துறை இலாகா அமைச்சர் வி. சி. சுக்லா நாடாளுமன்றத்தில் ஐயப்பாட்டுக்கிடமின்றி

(4-ம் பக்கம் பார்க்க)

---

## தமிழக விவசாய சங்க மாநடு

## திருவாரூரில் டிச. 23, 24-ல்

**தோழர் ஏ.கே.கோபாலன் எம்.பி.**

**,, சுசீலா கோபாலன், எம். பி.**

**கேரள அரசு, தமிழக அரசு**

**அமைச்சர்கள்**

**தோழர் பி. ராமமூர்த்தி எம்.பி.**

ஆகியோர் கலந்து கொள்ளுகிருர்கள்

டிசம்பர் 23, 24-தேதிகளில் பிரதிநிதிகள் கூட்டம்நடைபெறும். 24—ந் தேதி மாலை மாபெரும் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெறும்.

**உழவர் பெருங்குடி மக்களே அணி திரண்டு வாரீர்!**

---

## ஆதாரமிருந்தால் மக்கள் முன்பு வைக்கத் தயாரா?

### சுக்லாவுக்கு

### இ. எம். எஸ். சவால்

உள்துறை அரசாங்க மந்திரி வி. சி. சுக்லா கம்யூனிஸ்டுகளுக்கு வெளியிலிருந்து பணம் வருகிறதா? என்று கேட்ட கேள்விக்கு நாடாளுமன்றத்தில் பதில் தரும் பொழுது 'அரசாங்கத்திடம் சில தகவல்கள் இருப்பதாக" குறிப்பிட்டார். பாகிஸ்தானிலுள்ள சீனப் பாங்கின் டாக்கா கிளையிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளுக்கு பணம் வருகிறதா? என்பதுதான் ஹேம் பருவா கேட்ட கேள்வி. இதற்குத்தான் சுக்லா விஷமத்தனமான மேற்கூறிய பதிலை தெரிவித்தார். இதைக் குறிப்பிட்டு தோழர் இ. எம். எஸ். கீழ்வருமாறு சவால் விட்டுள்ளார்;—



"சுக்லாவிடம் எந்த தகவல் இருக்கிறது என்று குறிப்பிடுகிருரோ அது எதுவாகயிருந்தாலும் அதை இந்த நாட்டு மக்கள் முன்புவைக்க தயாரா? இந்த சந்தர்ப்பத்தில் முன்னுள் உள்துறை அமைச்சர் நந்தா இது போன்ற அறிக்கைகளை வெளியிட்டது அனைவருக்கும் ஞாபகமிருக்கும். அவைகளை நிரூபிக்கும்படி நாங்கள் சவால் விட்டோம். ஆனுல் நந்தா அதை நிரூபிக்க முற்றிலும் தவறிவிட்டார். இந்நிலையில் திரு சுக்லா அதே குற்றச்சாட்டுகளைக் கூற முன் வந்திருக்கிருரென்ருல் அவைகளை நிரூபிக்க தயாராக முன்வர வேண்டும்."

கடைசி நிமிடத்தில் அவசியமாக இருந்தாலொழிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை தடை செய்யப்போவதில்லை என்று சுக்லா நாடாளுமன்றத்தில் கூறியது பற்றி தோழர் நம்பூதிரிபாட் கீழ் வருமாறு குறிப்பிட்டார்.

"எங்களது கட்சியை சட்டவிரோதமாக்க வேண்டுமென்று சுதந்தரா கட்சி, ஜனசங்கப் பிரதிநிதிகளும் ஒரு சில காங்கிரஸ்காரர்களும் கோரி வரும் கோரிக்கைக்கு அவர் அனுதாபத்துடன் இருப்பதையே தன் பதில் மூலம் அவர் வெளிப்படுத்தியுள்ளார். ஆனுல் எங்கள் கட்சிமீது விதிக்கப்படும் தடை எங்கள் மீது தொடுக்கும் ஒரு தாக்குதல் மட்டுமல்ல; காங்கிரசைப் பதவியிலிருந்து அகற்ற போராடிக்கொண்டிருக்கும் சகல சக்திகளின் மீதும் தொடுக்கும் தாக்குதலாகவே அது இருக்கும் என்பதை ஜனநாயகத்தின் மீது நம்பிக்கையுள்ள அனைவரும் உணர்வார்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு."

தீக்கதிர்

# மே. வங்க அரசு கவிழ்க்கப்பட்டதை கண்டித்து ஆர்ப்பாட்டங்கள்

### மாதவரத்தில்

மேற்கு வங்க ஐக்கிய முன்னணி அரசை நீக்கம் செய்த மத்திய அரசின் தலையீட்டை கண்டித்து 29-ம்தேதி மாதவரம் தோல் பதனிடும் தொழிலாளர் சங்க அலுவலகத்திலிருந்து புறப்பட்டு மத்திய அரசின் அடாத செயலை கண்டித்து தொழிலாளர் முழக்கமிட்டனர்.

மாதவரம் கண்ணபிரான் கோயில் தெருவில் தோழர் மா. பொ. சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்ற கண்டனக் கூட்டத்தில் தோழர்கள் சி. கெ. மாதவன், து. வீரராகவன் ஆகியோர் பேசினர்.

### திருவொற்றியூரில்

திருவொற்றியூரில் சர்வ கட்சி ஊர்வலம் நடைபெற்றது. பின்னர் வ. ஆ. ஞானசாமி தலைமையில்நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் என். சங்கரய்யா எம்.எல்.ஏ (கம்யூமார்க்சிஸ்ட்) எம். கே. ராமசாமி (வலது), வை. பார்த்தசாரதி (தி.மு.க) ஷரீப் (லீக்), சொக்கலிங்கம் (த.அ.க), மு. குப்புசாமி (தொழிற்சங்கம்) ஆகியோர் பேசினர்.

### ஸ்ரீவில்லிபுத்தூரில்

ஸ்ரீவில்லிபுத்தூரில் தோழர் எஸ். அழகிரிசாமி தலைமையில் நடைபெற்ற சர்வகட்சிக் கூட்டத்தில் திரளான மக்கள் கலந்து கொண்டனர். நம் கட்சியின் சார்பில் கே. ராசு, தி.மு.க. சார்பில் ஆர். கே. துரை, எஸ். எஸ். பி. சார்பில் எஸ். வரதராஜன், பார்வார்ட் பிளாக் சார்பில் முல்லை பாண்யன், வலதுசாரிகள் சார்பில் கே. அப்பு பேசினர்.

### ஆத்தூரில் தீப்பந்த ஊர்வலம்

ஆத்தூரில் மேற்கு வங்க கூட்டணி அரசு கலைக்கப்பட்டதைக் கண்டித்து தோழர் ஜெயபாண்டியன் தலைமையில் தீப்பந்த ஊர்வலத்தில் நூற்றுகணக்கில் விவசாயிகளும், தொழிலாளர்களும் கலந்து கொண்டனர். தோழர் பி. டி. சம்பத் தலைமையில் கண்டனக் கூட்டம் நடைபெற்றது.

### தூத்துக்குடியில்

தூத்துக்குடி நகரெங்கும் நவ. 25-ம்தேதி கண்டன போர்டுகள் எழுதி வைக்கப் பட்டன. முன்னறிவிப்பின்றி தீப்பந்த ஊர்வலத்தில் 100க்கு மேற்பட்ட தீப்பந்தங்கள் எடுத்துச் செல்லப்பட்டன. ''தர்மவீரா ஒழிக'', ''இந்திரா காந்தி ஒழிக'' போன்ற கோஷங்கள் ஒலித்து எதிரொலித்தன.

### தர்மபுரியில்

வங்க ஐ. மு. அரசை அகற்றியதை எதிர்த்து 29-11-67ல் சர்வ கட்சிகளின் சார்பில் உணர்ச்சி மிக்கதோர் ஆர்ப்பாட்டம் நடந்தது. நகர தி.மு.க. செயலாளர் டி. எஸ். சண்முகம் தலைமையில் நடைபெற்றது. ஊர்வலத்துக்குப் பின் நடந்த பொதுக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) சார்பில் தோழர்கள் எ. முனுசாமி, டாக்டர் கே.எ. பழனி, திமுக சார்பில் திரு. பெரும்பாக்கன், வலது கம்யூனிஸ்ட் சார்பில் என். முத்து, தமிழ்த்தாசன், ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன் சார்பில் வி. பெருமாள் ஆகியோர் மத்திய அரசின் அடாத செயலை எதிர்த்து முழங்கினர்.

### அருப்புக்கோட்டையில்

நவ. 27-ல் ''வங்க கவர்னர் தர்மவீராவை டிஸ்மிஸ் செய்'' துரோகி பி. சி. கோஷை வெளியேற்று'' என்ற கோஷங்கள் முழங்க தோழர் தி.மு. கலுசு சிவலிங்கம் தலைமையில் தீப்பந்த ஊர்வலம் நடத்தது. திரு. மா. பொன்னுசாமி (தி. மு. க.) தலைமையில் நவம்பர் 29-ல் இங்கு பொதுக்கூட்டம் நடந்தது. இதில் எம்.எஸ்.ராமசாமி (தி.மு.க.) தி.மு. கலுசு சிவலிங்கம்(கம்யூ-மார்க்சிஸ்ட்) ஏ. வி. சிவன் (பார்பார்டு பிளாக்), எம். கிருஷ்ணன் (வலது கம்யூ), ஏ. தாவுத்கான் (மு.லீக்), கு. ரத்தினம் (கம்யூ-மார்க்சிஸ்ட்), பி. எ. சங்கரலிங்கம் (வலது கம்யூ) ஆகியோர் வங்கத்தின் ஜனநாயகப் படுகொலையை எதிர்த்து பேசினர்.

# வலதுசாரிகளின் கொள்கைக் குழப்பம்

வலதுசாரி கம்யூனிஸ்ட் கட்சியின் தேசீயக் கவுன்சில் சென்ற8 நாட்களாக நடந்துமுடிந்துள்ளது. அதில்அவர்களுடைய மந்திரிகள் வலதுசாரி அரசாங்கங்களிலிருந்து எவ்வளவு சீக்கிரம்முடியுமோ அவ்வளவுவிரைவில் ராஜிஞமா செய்து விட்டு வெளியேறுவதென்று முடிவு செய்திருக்கிறார்களாம்! அதாவது கல்கத்தாவில் தேர்தல் முடிந்தவுடன் அவர்களுடைய தேசீயக் கவுன்சில் எடுத்த முடிவு காங்கிரசை எதிர்த்த எல்லாக் கட்சிகளுடனும் சேர்ந்து மந்திரிசபை அமைப்பதென்ற முடிவு தவறானதென்றும் அதை மாற்றி கொள்வதென்றும் தீர்மானித்திருக்கிறார்களாம்.

அதுமட்டுமல்ல. திருவாளர் டாங்கேயின் தலைமை மீது அதிருப்தி தெரிவித்தாகவும் அவர் தனக்கு வயதாகி விட்டதால் தலைமைப் பதவியிலிருந்து விலகிக் கொள்வதாக அறிவித் ததாகவும் செய்திகள் வந்துள்ளன.

வலதுசாரிகளிடையே இத்தகைய குழப்பம் ஏற்பட்டதில் நமக்கு ஆச்சரியமே இல்லை, அனேகமாக ஆறு மாதத்திற்கொருமுறை அவர்களுடைய கொள்கைகளை மாற்றிக் கொள்வது அவர்களுடைய வரலாறு. இந்த நாட்டுப் பிரச்சினைகள் பற்றி ஒரு தெளிவான, உறுதியான வர்க்கப் பார்வை, மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் பார்வை இல்லாததின் விளைவே இவர்களது குழப்பத்திற்கு முக்கியமான காரணம்.

இந்த நாட்டில் உள்ள எல்லா பூர்ஷுவா அரசியல் கட்சிகளிடையேயும் கொள்கைக் குழப்பம் ஏற்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

இந்த பூர்ஷுவா வர்க்கத்தைப் பற்றிய பாட்டாளி வர்க்கப் பார்வையில்லாத வலதுசாரி கம்யூனிஸ்டுகளிடையேயும் குழப்பம் ஏற்பட்டதில் ஆச்சரியம் இல்லை.

ஒரே ஒரு உதாரணம். தேர்தலுக்கு முன்பு தமிழ் நாட்டில் தி. மு. க. ஒரு பிற்போக்கு கட்சி என்றார்கள் தமிழ் நாட்டு வலதுசாரி கம்யூனிஸ்டுகள். தேர்தல் முடிந்த பிறகு சரியான அடி வாங்கிய பிறகு தி.மு.க. ஒரு ஜனநாயகக் கட்சி என்ற முடிவுக்கு வந்தார்கள். தேர்தலுக்கு முன்பு இவர்களுடைய தேசீய ஜனநாயகப் பார்வை அப்படி. தேர்தல் முடிந்த பின் இவர்களுடைய தேசீய ஜனநாயகப் பார்வை இப்படி. ஒரே மாதத்தில் அவர்களுடைய தேசிய ஜனநாயகம் பட்டபாடு இது!

தேர்தலுக்கு முன்பு சுதந்திரா, ஜனசங்கக் கட்சிகளை பயங்கரமானபிற்போக்கு சக்திகள் என்று வருணித்து அவைகளை முறியடிப்பதே தங்களுடைய பிரதான குறிக்கோள் என்று அறிவித்தார்கள். இவர்களை முறியடிப்பதற்காக காங்கிரசுக்கு மறைமுக உதவி செய்யவும் தயாராக இருந்தார்கள். தேர்தல் முடிந்து காங்கிரஸ் ஒன்பது மாநிலங்களில் மைனாரிடியாக ஆன உடனே, பிற்போக்கு சக்திகள் பற்றிய இவர்களது இலக்கணம் திடீரென்று மாறியது. இந்த நாட்டிலே மிகமிக பிற்போக்கான சக்தி காங்கிரஸ்தானென்றும் அதை ஒழிக்க சுதந்திரா, ஜனசங்கத்துடன் சேர்ந்து கொண்டு மந்திரி சபை அமைப்பதும் அவசியம் என்றார்கள். ஒரே மாத காலத்தில் பிற்போக்கு சக்திகள் பற்றிய இவர்களது கணிப்பும் திடீர் பல்டி அடித்தது. சுதந்திரா, ஜனசங்கத்துடன் சேர்ந்து மந்திரி சபை அமைப்பது தங்களுடைய தேசீய ஜனநாயகத்தின் சாயல் என்றும் வருணித்தார்கள். இன்றைக்கு, இதே சுதந்திரா, ஜனசங்கக் கட்சிகள் ஆதிக்கம் செலுத்தும் உ. பி. பீகார் போன்ற மாநிலங்களில் மந்திரி சபைகளிலிருந்து இவர்களைப் பிடித்து அந்தக் கட்சிகள் வெளியே தள்ளுகிறார்கள். ஆகவேதான் பிற்போக்கு சக்திகளுடன் வலதுசாரி கம்யூனிஸ்ட்டுகள் கூட்டு மந்திரி சபையில் இருப்பது தங்களுடைய ''புரட்சிகரமான வழியிலிருந்து'' மாறுபட்ட செயல் என்ற ஞானோதயம் இப்பொழுது பிறந்திருக்கிறது.

இத்தனை நிகழ்ச்சிகளுக்குப் பிறகாவது இவர்கள் தங்களுடைய அடிப்படையான வர்க்கப் பார்வையற்ற கொள்கையைத் திருத்திக் கொள்ளத் தயாராயிருக்கிறார்களா என்றால் இல்லை. இவர்களது நடைமுறைக் கொள்கைகளில் ஏற்பட்டுள்ள இத்தனை தடுமாற்றங்களுக்கும் தளமாக இருப்பது இவர்களுடைய கட்சியின் பம்பாய் மகாநாட்டுத் தீர்மானம். இந்தியப் பூர்ஷுவாக்களைப் பற்றியும், தேசீய ஜனநாயகம் பற்றியும் நிறைவேற்றிய தீர்மானத்திலுள்ள அடிப்படைக் கொள்கை. இந்திய பூர்ஷுவாக்களுடன் சேர்ந்து தொழிலாளிவர்க்கம் கூட்டணி வகுக்கவேண்டும். அத்தகைய கூட்டணி ஆட்சியே தேசீய ஜனநாயகம்; அதன் மூலம் முதலாளித்துவமல்லாத பாதையில் நாட்டை சோஷலிசத்தை நோக்கி அழைத்துச் செல்ல முடியும் என்ற அவர்களது அடிப்படையான உணர்வல்லவா காங்கிரசைப் பற்றியும், சுதந்திராவைப் பற்றியும், ஜனசங்கத்தைப் பற்றியும் பல நப்பாசைகள் கொள்ளும்படி செய்தது? இந்த அடிப்படைச் கோளாறைப் போக்குவதற்கு இன்று வலதுசாரி கம்யூனிஸ்டுகள் தயாராகயிருக்கிறார்களா என்பதே கேள்வி. சமீபத்தில் கூடிய அவர்களது தேசீயக் கவுன்சில் கூட்டத்தில் புரட்சிகரமான வார்த்தைகளை உச்சரித்தனரே தவிர, உண்மையில் அவர்கள் திருந்தவில்லை.

ஒரு சில தலைவர்களை வைத்துக் கொள்வதும், அல்லது மாற்றுவதுமல்ல அல்ல பிரதான பிரச்னை. குருஷ்சேவ் போனாலும், குருஷ்சேவின் கொள்கைகளைத்தான் இன்றைய சோவியத் தலைமை பின்பற்றுகிறது.

அதேபோல, டாங்கேயை விலக்கி விட்டு, டாங்கேயிசத்தைப் பின்பற்றப் போகிறார்கள்.வலதுசாரி கம்யூனிஸ்ட்டுகள் மாறவில்லை என்பதற்கு அவர்களுடைய நடைமுறையே எடுத்துக்காட்டு. எந்தப் பிற்போக்கு சக்திகளுடன் சேரமாட்டோமென்றும், இடதுசாரி சக்திகளுடன் ஒற்றுமையை வலுப்படுத்த வேண்டுமென்றும்இன்று பேசுகிறார்களோ அந்த இடதுசாரி ஜனநாயக சக்திகளின் ஒற்றுமையை சீர்குலைப்பதையே தங்களது அன்றாட வேலையாகக் கொண்டிருக்கிறார்கள் வலதுசாரிகள்.

தொழிலாளி வர்க்கத்தின் ஒன்றுபட்ட ஸ்தாபனமான அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரசை ஒன்றுபட்ட ஸ்தாபனமாக வளர்ப்பதற்குப் பதிலாக தங்கள் கையில் உள்ள திருத்தல் வாதக் கருவியாகவே பயன்படுத்துகிறார்கள். தங்களுடைய தலைவர்களைக் கொண்டிராத தொழிற்சங்கங்களைப் பிளவு படுத்துவது மட்டுமல்ல, தங்களைத் தலைவராகக் கொண்டிராத மற்ற தொழிற்சங்கங்களை அகில இந்திய தொழிற்சங்க காங்சிரசில் இணைப்பதற்குக்கூட மறுக்கிறார்கள். ஒன்றுபட்ட ஸ்தாபனமாக, இருந்த அகில இந்திய விவசாய சங்கத்தை பிளவுபடுத்துவதே தங்களுடைய கொள்கை என பகிரங்கமாக அறிவித்து விட்டார்கள். இவையெல்லாம் ஏகபோக முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும் எதிர்க்கும் கொள்கை உடையவர்கள் இவர்கள் என்பதையா எடுத்துக் காட்டுகின்றன?

இது மட்டுமல்ல; பூர்ஷுவாக்களைப் பின்பற்றும் மிகக் கேவலமான சர்வதேசீய கொள்கையை இவர்கள் பின்பற்றுகிறார்கள். இடையறாத சீன எதிர்ப்பில் ஈடுபட்டிருக்கும் இந்திய முதலாளி வர்க்கத்தையும், அதன் கட்சிகளையும் போலவே, வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் சீன எதிர்ப்பு வெறியை உமிழ்ந்து கொண்டே இருக்கிறார்கள். பூர்ஷுவாக்களைப் போலவே இவர்களும், கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியை சீன ஏஜெண்டுகளென்று வசைபாடுகிறார்கள். சீனாவை எதிர்த்தால்தான் இந்நாட்டின் மீது தேச பக்தி உடையவர்கள் என்பது இவர்களுடைய கொள்கை. பாட்டாளி வர்க்க சர்வ தேசீயத்திற்கு விரோதமான இந்தக் கொள்கையை இவர்கள் மாற்றிக் கொண்டதாக இன்னும் தெரியவில்லை.

மார்க்சிஸம்—லெனினிசம் என்றக் கொள்கையைக் கைவிட்டு விட்ட இவர்களுக்கு தேசீயப் பிரச்னைகள் மட்டுமல்ல; சர்வ தேசீயப் பிரச்னைகளிலும், சகல நடைமுறைத் தந்திரகளிலும் குழப்பமும், கோளாறும் ஏற்படுவது இயற்கையே. இதிலிருந்து மீள வேண்டுமானால் ஒரே வழிதான் உண்டு. தங்களுடைய பம்பாய் மாநாட்டுத் தீர்மானத்தைப் பகிரங்கமாக தவறு என்று ஒப்புக் கொண்டு மார்க்சிஸ்ட்—லெனினிச பாதைக்குத் திரும்புவது ஒன்றுதான் அந்தவழி. ஜனநாயக ஒற்றுமையை உருவாக்குவதில் நேர்மையாகச் செயல்பட வருவது ஒன்றுதான் தங்களுடைய குழப்பமான அழிவு நிலையிலிருந்து மீளும் ஒரே வழி.

★

# நஷ்ட ஈடு வாங்கி கொண்ட ஜமீன்தார்களுக்கு பண்ணைநிலம் கிடையாது

## மதுரை மாவட்ட விவசாயிகள் மாநாட்டுத் தீர்மானம்

### 185 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்

மதுரை மாவட்ட விவசாயிகள் சங்க மாநாடு போடியில் டிச. 2-ம் தேதி தோழர் பி. வி. துரைராஜ் தலைமையில் நடைபெற்றது. ஆர். ராமராஜ் கொடியேற்றி வைத்துப் பேசினர்.

என். ராமச்சந்திரன் (காரியதரிசி) சமர்ப்பித்த அறிக்கை மீது 17 பேர் கருத்து தெரிவித்தார்கள். பின்னர் அந்த அறிக்கை அங்கீகரிக்கப்பட்டது.

பிரதிநிதிகள் கூட்டத்தில் 185 பேர் கலந்து கொண்டனர்.

மாநாட்டில் நில உச்ச வரம்புச் சட்டத்திலுள்ள விதி விலக்குகளை முற்றும் நீக்கி குடும்பத்துக்கு 15 ஏக்கர் நிலம்தான் வைத்துக் கொள்ள அனுமதிக்க வேண்டும் என்றும் சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டத்தில் நேரடியாக உடல் உழைப்புக் கொடுத்து விவசாயம் செய்பவர்களுக்கே 'தனது சாகுபடி' என்று அடங்கலில் பதிய வேண்டுமென்றும், 17-கலத்தைப் பூர்த்தி செய்யாவிட்டால் ஜமா பற்றி அடங்கலை ஏற்றுக் கொள்ளக் கூடாதென்றும், ஒவ்வொரு பஞ்சாயத்தின் பரிசீலனைக்கும் அடங்கல் அனுப்பப்பட்ட பின்னரே அதனை ரெவின்யூதஸ்தாவேஜாக் கொள்ள வேண்டுமென்றும் நியாய வாரச் சட்டத்தைக் கட்டாயமாக அமுல் படுத்தவும், வார வீதத்தைக் குடியானவனுக்கு 75-ம் நிலச்சுவானுக்கு 25 ம் கொடுக்கும் ரீதியில் சட்டமியற்ற வேண்டுமென்றும் பிரதிநிதிகள்ஆலோசனைகள்கூறினர்.

நஷ்டஈடு வாங்கிக் கொண்ட ஜமீன்தார்களுக்கு பண்ணை நிலம் வைத்துக் கொள்ள அரசாங்கம் அனுமதிக்கக் கூடாதென்றும், பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் ஒவ்வொரு ஜமீன்தாரும் அனுமதிக்கப்பட்ட பண்ணை நிலம் போக இடைக் காலத்தில் அவர்கள் சட்ட விரோதமாக ஆக்கிரமித்துக் கொண்ட நிலங்கள் அனைத்தையும் பறிமுதல் செய்து விவசாயிகளுக்குக் கொடுக்க வேண்டுமென்றும் தீவிரமாக வாதாடி தீர்மானம் நிறைவேற்றினர்கள். மேலும் கொள்முதல், பின்தங்கிய பிரதேசங்களாகப் பிரகடனபடுத்த வேண்டிய பிரச்னை, மழையின்மையால் பாதிக்கப்பட்ட பிரதேசங்களுக்கு நிவாரணம் அளிக்கும் பிரச்னை முதலியன பற்றி 40 தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

கேரள சட்டமன்ற உறுப்பினர் தோழர் கே. ஐ. ராஜன், தட்சிண ரயில்வே யூனியனின் மதுரைக் கிளை ஆகியோரிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப்பட்டன. மோட்டார் தொழிலாளர்சங்க காரியதரிசி தோழர் எஸ். மன்னர்சாமி நேரில் வாழ்த்துக் கூறினர். தமிழக சட்டமன்ற கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் மாநாட்டுத் தீர்மானங்கள் செயல்படுவதற்குப் பிரதிநிதிகளும், சங்கங்களும் செயல்பட வேண்டிய முறைகள் பற்றி விளக்கினர்.

தோழர் பி. ராமர் நன்றி கூற மாநாடு கலைந்தது. மாநில மாநாட்டுக்கு 50 பிரதிநிதிகள் தேர்ந்தெடுககப்பட்டனர்.

# நிலமற்ற விவசாயிகளுக்கு நிலம் தருக

## நீலகிரி மாவட்ட விவசாயிகள் மாநாட்டுக் கோரிக்கை

நீலகிரி மாவட்ட விவசாயிகள் மாநாடு எருமாடு கிராமம் கொளச்சால் மைதானத்தில் அலங்கரிக்கப்பட்ட பந்தலில் 26-11-67 நடைபெற்றது.

எருமாடு வி. ச. தலைவர் கோவிந்தன் செட்டி கொடியேற்றி வைத்தார். தியாகிகள் நினைவாக எழுப்பப்பட்டிருந்த ஸ்தூபிக்கு முன்னல், தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த 45 பிரதிநிதிகள் கூட்டத்துக்கு தோழர் அப்துல் சத்தார், கோவிந்தன் செட்டி தலைமை வகித்தனர்.

வரவேற்பு கமிட்டி செயலாளர் தோழர் பி. கிருஷ்ணன் குட்டி, பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசினர்.

பிரதிநிதிகள் விவாதத்திற்குப் பிறகு, தோழர் கெ. ராஜன் தீர்மானங்களை பிரேரேபித்து விளக்கிப் பேசினர்.

மேற்கு வங்க அரசை பதவி நீக்கம் செய்த கவர்னரின் செய்கையை மாநாடு வன்மையாக கண்டனம் செய்தது.

கைவசம் வைத்து விவசாயம் செய்து வரும் பூமிகளை உரிமை மாற்றம் செய்துதரக்கோரியும், விவசாயிகள் வசமுள்ள பூமிகளை காட்டு இலாகாவும், பட்டுப்பூச்சி பண்ணைகளுக்காகவும் எடுத்துக் கொள்ள நடைபெறும் முயற்சியை அரசு கைவிடக் கோரியும், தனி நபருக்கு கொடுக்க ஒதுக்கப்பட்டுள்ள பூமியை நிலமற்ற விவசாயிகளுக்கு வழங்கும்படி வற்புறுத்தியும், நில உரிமை வழங்கும் கமிட்டியை புதிதாக அமைத்து வி. ச. பிரதிநிதிக்கு பிரதிநிதித்வம் கொடுக்க கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மற்றும், விவசாயிகள் நிறைந்த பகுதிகளான எருமாடு, காரக்கொல்லி, கப்பாலாபோன்ற பிரதேசங்களில் மருத்துவ வசதிகள், சிறுபாசனத்திட்டம், பஸ் போக்குவரத்து முதலியவற்றிற்கு வழிவகை செய்யுமாறு வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மலையாள மொழி பேசும் மக்கள் தொகை அதிகமாக உள்ள இடங்களில், மலையாள மொழி ஆரம்ப பள்ளிக்கூடங்களை அமைத்து நடத்தவும், சுடுகாடு இல்லாத பிரதேசங்களில் நிலம் ஒதுக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கெ. ராஜன்தலைவர், அப்துல் சத்தார் உதவி தலைவர், பி. கிருஷ்ணன் குட்டி, செயலாளர் வி. பொன்னன் கூட்டுச் செயலாளர், டி. கே. லாசர் பொருளாளர், கெ. ஐ. செரியான், கே. எல், எலியாஸ், கே. ஜி. சுந்தரம் ஆசாரி, டாக்டர் சாமுவேல், கெ. கெ. வி. முகமது, கெ. ராமசாமி ஆகியோரைக் கொண்ட நிர்வாக கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது.

திருவாரூர் மாநில வி. ச. மாநாட்டுக்கு 5 பிரதிநிதிகளும் 2 மாற்று பிரதிநிதிகளும் தேர்வு செய்யப்பட்டனர்.

மாலை 3 மணி அளவில், பல பகுதிகளிலிருந்தும் விவசாயிகள் செங்கொடிகளுடன் ஊர்வலமாக வந்தனர். பின்னர் மாநாட்டு பந்தலிலிருந்து மாபெரும் அணிவகுப்பு ஊர்வலம் தோழர் ராஜன், கிருஷ்ணன்குட்டி தலைமையில் நகர்வலம் வந்தது. பொதுக்கூட்டத்திற்கு தோழர் சத்தார் தலைமை வகித்தார். தோழர்கள் ராஜன், குட்டன், பொன்னன், கிருஷ்ணன் குட்டி பேசினர்கள்.

கதாகாலட்சேபமும், மலையாள நாடகமும் சிறப்பாக நடைபெற்றன.

# நெல்லை மாவட்ட விவசாயிகள் சங்க மாநாடு

திருநெல்வேலிமாவட்ட விவசாயிகள் சங்க 7-வது மாநாடு சிங்கை தாய் சினிஸ் தியேட்டரில் டிச. 3-ம் தேதி நடைபெற்றது. தோழர் டி. ஆர். சுப்பிரமணியம் தலைமை வகித்தார். கே. பி. ஜானகிஅம்மாள் எம். எல். ஏ. கொடி ஏற்றி வைத்தார். தோழர் எஸ். பாலவிஞயகம் மாநாட்டை திறந்து வைத்தார். மாவட்டச் செயலாளர் பி. சொர்ணம் ஆண்டறிக்கையைப்படித்தார். அதன்மீது நடைபெற்ற விவாதத்தில் சண்முகவேல் செல்லப்பா தேவர், விஸ்வை வீராசாமி, பிச்சமுத்து மற்றும் பலர் பேசினர். அந்த அறிக்கையும் 30-க்கும் மேற்பட்ட தீர்மானங்களும் சில திருத்தங்களுக்குப் பிறகு ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டன.

புது வருடத்திற்கு டி. ஆர். சுப்பிரமணியம் தலைவராகவும் சு. பாலவிஞயகம், பெரும்படையான், கோவில்பிள்ளை உபதலைவர்களாகவும் எம். பாண்டியன் பொதுச் செயலாளராகவும் சந்தனமாரியப்பனும் பிச்சமுத்துவும் உதவிச் செயலாளர்களாகவும் அகஸ்தியன் பொருளாளராகவும், தேர்ந்தெடுக்கப்பட்டனர். மற்றும் 15 பேர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாநில மாநாட்டிற்கு 15 பிரதிநிதிகளும் 5 மாற்று பிரதிநிதிகளும்தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாலையில் சிவந்திபுரத்திலிருந்து நல்லசிவன், டி. ஆர். சுப்பிரமணியம் தலைமையில் மாபெரும் ஊர்வலம் துவங்கியது. ஊர்வலத்தில் வேஷங்கள், சிலம்பாட்டங்கள் முதலியன இடம்பெற்றிருந்தன.

இரவில் மூன்று லாம்பில் டி.ஆர்.சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தீர்மானங்களைவிளக்கி ஏ. நல்லசிவன், கே.பி. ஜானகி அம்மாள், ஆர். வி. அனந்தகிருஷ்ணன், சு. பாலவிஞயகம் பேசினர்.

# கருவேல் நாயக்கன்பட்டி விவசாயிகள் வெற்றி

கருவேல் நாயக்கன் பட்டி விவசாயிகளை பரம்பரை பரம்பரையாக உழவடை செய்து வந்த நிலத்திலிருந்து வெளியேற்ற போலீசையும் கோர்ட்டையும் பயன்படுத்தி பழைய ஜமீன்தார் தங்கபாண்டியன் செய்த தந்திரங்கள் விவசாயி வர்க்கத்தினரின் ஒன்றுபட்ட முயற்சியால் முறியடிக்கப்பட்டது.

நீதிமன்றத்தில் தகுந்த ஆதாரங்களைக் காட்டி வாதாடியதின்பேரில் 144 தடை உத்தரவு பிறப்பிக்குமாறு ஜமீன்தார்கோரியதை கோர்ட்டார் நிராகரித்தனர்.

# மேட்டூர் தாலுக்கா விவசாயிகள் மாநாடு

வீ.புதூர் பிளன்பட்டி விவசாயிகள் சங்க முதலாண்டு விழாவும் மேட்டூர் தாலுக்கா விவசாயிகள் மாநாடும் கோனூர் சினிமா கொட்டகையில் நவ. 26-ம் தேதி நடைபெற்றது.

தோழர் எஸ். மணி கொடியேற்றி வைத்தார். கே. எஸ். அர்த்தனரி மாநாட்டைத் திறந்து வைத்தார். கே. பி. தங்வேல் என். கே. வேலப்பன் பேசியபின் ஆர். ராமராஜ் சிறப்புரையாற்றினர். மாலையில் தோழர் எம். சீரங்கன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

# சிறுமுகை விஸ்கோஸ் தொழிலாளர் உண்ணுவிரதப் போராட்டம்

கேன்டீன் தொழிலாளருக்கு சம்பள உயர்வு கோரிக்கையை ஏற்க நிர்வாகம் பிடிவாதமாக மறுப்பதை எதிர்த்து சௌத் இந்தியா விஸ்கோஸ் தொழிற் சங்க நிர்வாகக் குழு உறுப்பினர்கள் 14 பேர் உண்ணுவிரதப் போராட்டம் மேற்கொண்டுள்ளனர்.

# சேலம் தாலுக்கா விவசாயிகள் மாநாடு

சேலம்தாலுகா விவசாயிகள் மாநாடு சீல்நாய்க்கன் பட்டியில் நவ. 28-ம் தேதி நடைபெற்றது.

தோழர் என். எஸ். பழனியப்பன் கொடியேற்றி வைத்தார். ஐ. மாயாண்டி பாரதி திறப்புரை நிகழ்த்தினர். ஆர். ராமராஜ் சிறப்புரை யாற்றினர்.

மாவட்ட மாநாட்டுக்கு 20 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

விவசாயிகளின் பழைய கடனைத் தீர்க்க நில அடமானபங்கு கடன் தரவேண்டும் என்றும்,

விவசாயத்துக்கு தாமதமின்றி மின்சாரம் தரவேண்டும் என்றும்,

விவசாயக் கருவிகளை குறித்த காலத்தில் குறைந்த விலை கிடைக்கச் செய்ய வேண்டும் என்றும்,

சீல் நாய்க்கன்பட்டி பிரதேசத்தில் புறம்போக்கு நிலங்களில் வீடுகட்டி இருப்பவர்களுக்கு நிலத்தைப் பட்டா செய்யக் கோரியும்,

ஹரிஜனங்களுக்கு வீடுகட்ட மான்யம் தரக்கோரியும்,

தோல் ஷாப் கழிவு நீரால் 1000 ஏக்கர் நிலமும் 250 வீடுகளும் பாதிக்கப் படுவதால் 1956-ம் வருட ஒப்பந்தத்தை அமுலாக்கக் கோரியும் இது சம்பந்தமாக நடவடிக்கை எடுக்காவிட்டால் 1968 ஜனவரியில் போராட்டம் நடத்துவதென்றும்,

நாகமலை மேய்ச்சல்காட்டை ஊராட்சி மன்றத்தில் ஒப்படைத்து கால்நடை மேய்ச்சலுக்கு கிடைக்கச் செய்யக் கோரியும்,

இரும்பு தொழிற்சாலைக்கு காஞ்சமலையில் நில ஆர்ஜித சர்வே நடத்தியலிருந்து நிறுத்தப்பட்டிருக்கும் மின்சார சப்ளையையும் கடன் வசதியையும் மீண்டும் விவசாயிகளுக்குத் தரக் கோரியும்,

சூரமங்கலம் குட்ஷெட்டின் தென்புறம் நடை பாதை அமைக்கக்கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்ற பட்டன.

# அடக்குமுறையால் அழிந்துவிடக் கூடியது அல்ல எங்கள் கட்சி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்விஷயத்தைத் தெளிவு படுத்தி விட்டார். அவர் கடந்த 10 நாட்களுக்குள் இருமுறை பார்லிமெண்டில் குறிப்பாக இதுபற்றி வாய் திறந்தாய் விட்டது. ''கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியைத் தடை செய்யப் போவதில்லை. ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளின் நடவடிக்கைகளை உஷாராகக் கண்காணித்து வந்து கொண்டிருக்கிறோம். அவசியப்பட்டவுடன் பாதுகாப்புச் சட்டமோ இதர சட்டங்களோ அவர்கள் மீது பயன்படுத்தப்படும். இறுதியாகத் தடை செய்வதும் ஆலோசிக்கப்படும்'' —இதுவே சுக்லாவின் பேச்சு.

அதிகார பூர்வமாக மத்திய சர்க்கார் மந்திரியே இவ்வளவு பகிரங்கமாகப் அப்பட்டமான ஜனநாயக விரோதச் செயலில் ஈடுபடுவோம் எனபேசிய பிறகு இதைப்பற்றி ஜனநாயக ஆர்வங்கொண்டோர் அசிரத்தை காட்டுவதோ, மௌனமாயிருப்பதோ அர்த்தமற்றது. நடவடிக்கை எடுக்கப்போவதாகக் கூறுவோர் ஆளும் கட்சியான காங்கிரஸ் கட்சி, பொது தேர்தலில் கிடைத்த தோல்விக்குப் பிறகு 1962, 1964 வருடங்களின் நிலைமைகள் இன்றில்லை என்று காங்கிரஸ் கட்சி உணருவதாலும், முதலில் நமது கட்சியைத் (கம்யூனிஸ்ட் கட்சியை) தனிமைப்படுத்தவும், நமது கட்சியின் நண்பர்கள், நேச சக்திகளிடடிருந்து, நம்மைப் பிரிக்கவும் திட்டமிட்டு வேலை செய்கிறார்கள். பிற எதிர்க்கட்சியினர் நம்மைப் பகைக்கவும் மக்களைக் குழப்பி வைக்கவும் அவதூறுப் பிரசாரத்தை ஏவி விட்டுள்ளார்கள். ராஜாஜி போன்றவர்கள் காங்கிரசின் இந்தத் ''தூய'' நோக்கத்திற்குப் பல்லக்குத் தூக்க சந்தோஷமாய் முன் வந்து வேலை செய்கிறார்கள். பக்தவத்சலம் எதற்காக வாழ்ந்தாரோ, வாழ்கிறாரோ, அதைத்தான் ராஜாஜி செய்கிறார். காமராஜரும், சி. சுப்பிரமணியமும் தங்களது சொற்பொழிவுகளில் மார்க்சிஸ்ட் கட்சியைத் தாக்கவும், மார்க்சிஸ்ட் கட்சியின் நேச உறவு பொல்லாதது என்று திராவிட முன்னேற்றக் கழகத்தை எச்சரித்தும் வந்துள்ளதைத் தமிழக மக்கள் மறந்திருக்க மாட்டார்கள்.

### பிள்ளையையும் கிள்ளி விட்டு .....

இப்போது புதிய காங்கிரஸ் தலைவர் பதவிக்குத் தேர்வு பெற்றுள்ள நிஜலிங்கப்பா, நமது கட்சியைப் பற்றி உஷாராயிருக்கும்படி தி.மு.க. வை மீண்டும் ஞாபகப்படுத்தியிருப்பது தற்செயலானதல்ல. காங்கிரஸ் தலைவராகவும், காங்கிரஸ் கொள்கையையும் கட்சியையும் பாதுகாக்க வேண்டியவராகவும் இப்போது பொறுப்பளிக்கப்பட்டுள்ள நிஜலிங்கப்பாவுக்கு. தி. மு. கழகம் நன்றாக ஆட்சி புரிய வேண்டுமென்பதிலும் இவ்வளவு அக்கறை, பரிவு ஏன்? கம்யூனிஸ்ட் வலையில் தி.மு.க. விழுந்து விடக் கூடாதென்று எவ்வளவுகவலை நமது மாநிலத்தில் தி.மு.க. அரசினை எதிர்த்து காங்கிரஸ் கட்சி ஓயாது எடுத்து வரும் தீய நடவடிக்கைகளையும் அவதூறுப் பிரசாரத்தையும் நிஜலிங்கப்பா கண்டிப்பாரா? அதற்கு மாறாக, காமராஜர், பக்தவத்சலம், சி. சுப்பிரமணியம் போன்ற காங்கிரஸ் தலைவர்கள் தி.மு.க. ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு காங்கிரஸ் கட்சியை நமது மாநிலத்தில் செயல்படுத்திவரும் சகல நடவடிக்கைகளும் நிஜலிங்கப்பாவின் ஆசியுடன்தானே நடைபெறும்! பிள்ளையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டும் மோசடிதானே இந்தப் புதிய காங்கிரஸ் தலைவரிடமிருந்து தி.மு.க. விஷயத்தில் நாம் எதிர்பார்க்க முடியும்.

இவையெல்லாம் — திட்டப்படி காங்கிரஸ் கட்சியின் தலைமையாலும், மத்தியகாங்கிரஸ் சர்க்காரைப் பயன்படுத்தியும் நடத்தப்பட்டு வருகின்றன. பொதுத் தேர்தலில் பெருவாரியான மக்களால் மாநிலம் மாநிலமாக வெறுத்தொதுக்கப்பட்ட காங்கிரஸ் கட்சி, மாற்றரசுகளை வீழ்த்தும் பணியில் இப்போது மும்முரமாக ஈடுபட்டிருக்கிறது. இதில் ஒரு முக்கியமான அம்சம் என்னவெனில் எதிர்க்கட்சிகளின் நேச உறவை சிதைத்துப் பிறகு அவற்றை ஒவ்வொன்றாய் நாசம் செய்து விடலாமென்ற கனவேயாகும். இந்த நோக்கம் நிறைவேறுவதற்குக் குறுக்கே நிற்கும் நமது கட்சியின் மீது காங்கிரஸ் கட்சிக்குக் கடுங்கோபம் வருவதில் ஆச்சரியமென்ன? நமதுகட்சியை அழித்தொழிக்க அவர்கள் என்ன பொய் வேண்டுமானாலும் சொல்லுவார்கள், என்ன ஜன விரோத நடவடிக்கைகளையும் கூச்ச நாச்சமின்றி மேற்கொள்ளுவார்கள்.

மேற்கூறிய அரசியல் கட்சிகளும் பத்திரிகைகளும் 'மார்க்சிஸ்ட்' கம்யூனிஸ்ட் கட்சியைத் தாக்கி வருவதற்கு—அவர்களை ஆட்டிப் படைக்கும் வர்க்க சக்திகளின் நெருக்கடியே பிரதான காரணம், வர்க்கப் பாகுபாடுகள் நிலவும் சமுதாய அமைப்பில், வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதபடி, சிறிய அளவுக்கோ, பெரிய அளவுக்கோ, மறைமுகமாகவோ, பகிரங்கமாகவோ, இடைவிடாது நிகழ்ந்துகொண்டிருக்கும் போது, குறிப்பிட்ட வர்க்கங்களின் பிரதிநிதிகளாகத்தான் அரசியல் கட்சிகள் இருக்க முடியும். வர்க்கப் போராட்டம் தீவிரமாகும் போது எல்லா வர்க்கங்களுக்கும் நண்பனென்ற நிலை விஞ்ஞான ரீதியாகத் தவறு என்பது மட்டுமல்ல, நடைமுறையில் தோல்வியுறும்.

### பாலுக்கும் காவல் ....

அப்போது பாலுக்கும்காவல் பூனைக்கும் தோழன் என்ற செப்பிடு வித்தை எடுபடாது. எந்த அரசியல் கட்சிகள் சாதாரண மக்கள் பக்கம் உறுதியாக நிற்கின்றன, எந்த அரசியல் கட்சிகள் மக்களின் விரோதிகளைப் பாதுகாக்கின்றன என்பதை வர்க்கப் போராட்டத்தின் உண்மைகள் மக்களுக்குத் தெளிவு படுத்தி விடும்.

அன்னிய ஏகாதபத்தியவாதிகள் — குறிப்பாக அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள், நமது கட்சியை விஷமென வெறுக்கிறார்கள். அவர்களது மூலதன ஊடுருவலையும் அதனால் நமது நாட்டிற்கேற்படும் தீங்கையும், வியட்நாம் போரில் அவர்கள் செய்து வரும் படுகொலையையும் நம்மைப் போல் வேறு எந்தக் கட்சியும் மக்களுக்கு எடுத்துரைக்க வில்லை. இந்த நாட்டில் தங்களது சுரண்டலை உறுதிப்படுத்திக்கொள்ள நடவடிக்கை எடுத்துவரும் இந்தத் தீய சக்திகளுக்கு நாம் ஒரு சட்டபூர்வமான கட்சியாக இருப்பது பெருங்கஷ்டமாக இருக்கிறது. அடுத்து, இந்த

எம். ஆர். வெங்கட்ராமன்

நாட்டின் பெருமுதலாளிகள், டாட்டாக்கள், பிர்லாக்கள், தமிழக ஏகபோக முதலாளிகள் போன்றவர்களுக்கு, நம்மை ஒழித்துக் கட்டியாக வேண்டும். அப்போதுதான் முதலாளிகளுடன் கூட்டுச் சேர்ந்துள்ள ஏற்பாடுகளைக் கொண்டு எல்லையற்ற லாபக் கொள்ளை அடிக்கலாம். இந்த நாட்டு நிலப் பிரபுக்களுக்கும் நாம் பகைவர்களே. காங்கிரஸ் கட்சி செய்த போலி நிலச்சீர் திருத்தமின்றி, உழுபவனுக்கு நிலம் உறுதிப்படுத்தும் உண்மையான நிலச் சீர்திருத்தத்திற்கும் நிலக்குவியல்களைத் தகர்ப்பதற்கும் போராடிவரும் கட்சி நமது கட்சி ஒன்றுதான் மேற்கூறிய தீய சக்திகள்தான் காங்கிரஸ் ஆட்சியைக் கருவியாகக் கொண்டு 20 வருடங்களுக்குள் நாட்டை நாசப்படுத்தியுள்ளன என்று நாம் கூறுகிறோம். இவர்களை எதிர்த்துப் போராடாமல் இன்றைய பொருளாதார நெருக்கடிக்குத் தீர்வு கான முடியாது, கோடானுகோடி மக்களுக்கு வாழ்வளிக்க முடியாது. காங்கிரஸ், சுதந்திரா, ஜனசங் போன்ற கட்சிகள் இந்த உண்மையை மக்களிடமிருந்து மூடிமறைத்து ஏமாற்றி இந்த ஆதிக்க வர்க்கங்களுக்கே தொண்டு செய்து வருகிறார்கள். ஜனநாயகத்தை விரும்பும் எந்தக் கட்சியும் இந்தக் கட்சிகளின் போக்கை எதிர்த்து முறியடித்துத்தானாக வேண்டும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை ஒடுக்கி விடுவதில் இந்தத் தீய சக்திகள் வெற்றி கண்டுவிடுவார்களென்று எண்ணவேண்டியதில்லை. அதற்கு மாறாக அவர்கள்தான் மூக்குடைபடுவார்கள். வெறும் அகம்பாவத்தில் நாம் இதைக் கூறவில்லை. ஏனெனில் இவ்வாறு அவர்கள் இன்று நம் கட்சியைத் தாக்க முன் வருவது அவர்களது பலவீனத்திற்கறிகுறியே தவிர அவர்களது பலத்திற்கு எடுத்துக் காட்டல்ல, முதலாளித்துவ நெருக்கடி உலகத்திலும் நமது நாட்டிலும் அந்த அளவுக்கு முற்றிவிட்டது. முதலாளித்துவ சமுதாய அமைப்பு இனி மக்களுக்கு வாழ்வளிக்க முடியாது. மேலும் மேலும் விலைவாசி உயர்வும், வேலையில்லாத் திண்டாட்டமும், பசியும், பிணியும், வியாபார மந்தமும், தொழில் ஸ்தம்பிப்பும், உற்பத்தி நெருக்கடியும் தான் மக்களுக்குக் கிடைக்கும் பரிசுகள். மக்களைக் கடுமையாக வாட்டித்தான் தமது லாபக் கொள்ளையைப் பாதுகாத்துக்கொள்ள முடியுமென்ற முடிவுக்கு ஏகாதிபத்தியவாதிகளும் ஏகபோக முத



லாளிகளும் வந்து விட்டார்கள். ஆட்சேபிப்பவர்களை சுட்டுத்தள்ளியும் அவர்கள் தங்கள் நோக்கத்தை நிறைவேற்ற முயற்சிப்பார்கள். அவர்களது சட்டசபைகளைக் கூடக் கலைத்துப் போலீஸ் ஆட்சி நடத்தத் தயங்கமாட்டார்கள். ஆனால் இவையெல்லாம் மக்களின் எதிர்ப்பை மேன்மேலும் தீவிரமாக்கும் மக்கள் வாழ்வுக்காக இப்போதே போராடும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள்,போராடியும் வருகிறார்கள். முதலாளித்துவ சட்டங்களையும், உபதேசங்களையும் அவர்கள் பொருட்படுத்தமாட்டார்கள். வயிறு காயும்போது வியாக்கியானம் பேச இடமேது! மக்களின் போராட்டங்கள் ஆளும் வர்க்கங்களின் போராட்டத்தை முறியடிக்குமென்பது உறுதி. மேற்கு வங்க மக்களின் ஒற்றுமையும் தியாக உணர்வும், எழுச்சியும், அரசியல் விழிப்பும் மீண்டும் மீண்டும் ஆளும் வர்க்கத்தைப் பின்வாங்கச் செய்யவும் திகைக்கவும் செய்யவில்லையா?

### நேச சக்திகள் உறவை வளர்ப்போம்

மக்களோடு உறுதியாகஇந்த நெருக்கடியான கட்டத்தில் நிற்க (மார்க்சிஸ்ட்) கம்யூனிஸ்டுகள் சபதமேற்றுக் கொள்ள வேண்டும். பிரதான விரோதிகளை எதிர்த்து, நேச சக்திகளின் உறவை எள்ளளவும் இழக்காது உறுதிப்படுத்திக்கொள்ளவும் வளர்த்துக் கொள்ளவும் மனப்பூர்வமாகவும் இதய சுத்தியுடனும் நாம் பாடுபட்டுக்கொண்டேயிருக்க வேண்டும். தொழிலாளிகள், விவசாயிகள், மாணவர்கள் முதலியவர்களின் இயக்கங்களும் பலமான வெகுஜன ஸ்தாபனங்களும் ஆளும் வர்க்கங்களின் சதிகளையும் தாக்குதல்களையும் தகர்த்தெறிவதில் முக்கிய பாத்திரம் வகிக்கத்தான் போகின்றன. நாட்டு நிலைமையையும், நலம் காண நாம் கூறும் ஆலோசனைகளையும், ஒவ்வொரு கம்யூனிஸ்டும் மக்களுக்கு விரிவாக எடுத்துக் கூற இடைவிடாது செயல்பட வேண்டும்.

மீண்டும் கூறுகிறோம். ஆளும் வர்க்கங்களின் வெறித்தனமான தாக்குதல்களின் அபாயத்தைக் குறைத்தும் மதிப்பிடவேண்டாம் அதே சமயத்தில் ஆளும் வர்க்கங்களின் திட்டம் வெற்றிகாணும் என்ற நிலைமையும் இல்லை, மக்கள் திரட்டப்படின் அவர்களது ஜனநாயக விரோத வெறிச் செயல்களை தடுத்து நிறுத்த முடியுமென்றும் சுட்டிக்காட்டவும் விரும்புகிறோம். எவ்வளவுக்கெவ்வளவு விரிவாக மக்களின் அணிவகுப்புஇத்தகைய தாக்குதல்களுக்கெதிராகத் திரள்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு துரிதமாக மக்களின் நம்பிக்கையும் சக்தியும் உயரும். இதை முன்னிட்டு ஜனநாயக உரிமைகளை உறுதிப்படுத்தும் போராட்டத்திற்கு அவ்வப்போது உருவாகிவரும் பிரச்சினைகளில், (மார்க்சிஸ்ட்) கம்யூனிஸ்ட் கட்சியின் பிரசாரமும் நடவடிக்கைகளும், மார்க்சிஸ்ட் கட்சியும் அதன் நேசக் கட்சிகளும் நண்பர்களும் சேர்ந்து நடத்தும் பிரசாரமும் நடவடிக்கைகளும் பிரிக்க முடியாத அளவுக்கு முக்கியத்துவம் பெறுகின்றன. அகில இந்திய ரீதியில் ஆளும் வர்க்கங்கள் தொடுக்கும் இத்தாக்குதலை முறியடிக்கவல்ல மக்கள் அணிவகுப்புக்கு எந்தச் சிறிய ஸ்தலப் பிரச்சினையும் ஊறு செய்வதற்கிடமில்லை.

### புதிய பலம்

1962-இலும் 1964-இலும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் நம்மைச் சிறைப்படுத்தி வைத்துக் கட்சியை முடமாக்கப் பார்த்தார்கள். சீனஏஜெண்டுகளென்று நம்மை வருணித்தார்கள். மனந் தளரவில்லை. மக்களிடம் சென்றோம். ஜனநாயக அபிப்பிராயம் நாட்டில் திரண்டெழுந்தது. இறுதியில் பெயர் போன நந்தா தான் விலாசம் தெரியாமல் ஓடிப்போனார். நமது கட்சி புது ஊக்கத்துடன் விறுவிறுப்பாகச் செயல்பட்டு மேலும் வளர்ந்தது.

பொதுத் தேர்தல்களில்— தமிழகத்தில் நாம் மேலும் பல நண்பர்களைப் பெற்றோம். சட்டசபையிலும் பாராளுமன்றத்திலும் ஸ்தானங்களை வென்றோம். வங்கத்திலும் கேரளத்திலும் மந்திரி சபைகளில் நமது கட்சித் தோழர்கள் முக்கிய பாத்திரம் வகிக்குமாறு மக்கள் தீர்ப்புக் கூறி நம்மை ஆதரித்தார்கள். சமீப காலத்தில் முதலாளி வர்க்க நெருக்கடியின் விளைவாக முதலாளிகள் எங்கும் தொழிலாளிகளைத் தாக்கி வரும் போது நாம் தொழிலாளிகளின் நியாயத்தை வலி

(8-ம் பக்கம் பார்க்க)

# விவசாயிகள் இயக்கத்தில் ஒரு திரும்பு முனை

# மன்னையில் விவசாயத் தொழிலாளர் மாநாடு

தஞ்சைமாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்க 6-வது மாநாடு மன்னார்குடியில் நாகம்மையார் இல்லத்தில் டிச. 3-ம் தேதி நடைபெற்றது.

தோழர் கே. ஆர். ஞான சம்பந்தம் எம்.எல்.ஏ. கொடியேற்றி வைத்தார்.

வீரத்தியாகி பக்கிரி அரங்கை தோழர் ஜீ. வீரையன் திறந்து வைத்தார்.

தோழர் ஆர். ரெங்கன் வரவேற்புரை நிகழ்த்தினர்.

தோழர்கள்என்.சங்கரய்யா, எஸ்.ஏ.முருகையன், பி. வெங்கடேசன், ஏ. நடராஜன் உரையாற்றினர்.

மாநாட்டில் 400 பிரதிநிதிகளும், 100-க்கு மேற்பட்ட பார்வையாளர்களும் கலந்து கொண்டனர்.

தோழர் பாரதிமோகன் எம். எல். ஏ. சமர்ப்பித்த அறிக்கைமீது நடைபெற்ற விவாதத்தில் 11 தோழர்கள் பங்கு கொண்டனர். சில திருத்தங்களுடன் அறிக்கை அங்கீகரிக்கப்பட்டது.

### தீர்மானங்கள்

கூலி நிர்ணயச் சட்டம் இயற்ற கோரியும், விவசாயிகளுக்குக் குடியிருப்புமனை வழங்கக் கோரியும் பூந்தாழங்குடி வழக்கை வாபஸ் வாங்கக் கோரியும், தரிசு புறம்போக்கு நிலங்களை நிலமற்ற விவசாயிகளுக்கு வழங்கக்கோரியும் தீர்மானங்கள் இயற்றப்பட்டன.

போராடும் வீர வியட்நாம் மக்களுக்கு ஆதரவு தெரிவித்தும் மேற்கு வங்கத்தில் ஜனநாயகப் படுகொலையைக் கண்டித்தும் தீர்மானங்கள் இயற்றப்பட்டன.

பூந்தாழங்குடி துப்பாக்கிப் பிரயோகத்தில் உயிர் நீத்த பக்கிரி குடும்பத்துக்கு அரசாங்கம் நஷ்டஈடு கொடுக்காததையும் வழக்கை வாபஸ் பெறாததையும் துப்பாக்கிப் பிரயோகத்துக்குக் காரணமாக இருந்த சப்-இன்பெக்டர் மீது நடவடிக்கை எடுக்காததையும் இந்தச் சம்பவத்துக்குக் காரணமாக இருந்த நிலப்பிரபுக்கள் மீது நடவடிக்கை எடுக்காததையும் கண்டித்துத் தீர்மானம் இயற்றப்பட்டது.

மாநாட்டில்கீழ்கண்டவர்கள் அடங்கிய நிர்வாகக் கமிட்டி அமைக்கப்பட்டது.

பி. எஸ். தனுஷ்கோடி (தலைவர்), எஸ். கணேசன் செயலாளர்) பாரதிமோகன் (உதவிச் செயலாளர்) எஸ். எஸ். ஆதிலிங்கம் (பொருளாளர்) மற்றும் 10 பேர் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்கள்.

இம்மாநாட்டையொட்டிமன்னார்குடி நகரமே எங்கு பார்த்தாலும் செங்கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஒரே சிவப்பு மயமாகக் காட்சியளித்தது.

ஊர்வலத்தில் 5000 பேருக்கு மேல் திரண்டு "உச்சவரம்புச் சட்டத்தை திருத்து" "உழுபவனுக்கே நிலம்", "பூந்தாழங்குடி வழக்கை வாபஸ் வாங்கு" "மேற்கு வங்க கவர்னரை வாபஸ் வாங்கு" போன்ற கோஷங்களை எழுப்பினர்.

## மாவட்டமெங்குமிருந்தும் விவசாயப் பெருங்குடி மக்கள் திரண்டனர்

### ஊர்வலம்

மாநாட்டையொட்டி மாலையில் மன்னை கீழப்பாலத்திலிருந்து தாரை, தப்பட்டை, கொம்புகுழல் முழக்கங்களுடனும் ஆட்டபாட்டங்களுடனும் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வாலத்தின் முன் செந்தொண்டர்கள் அணிவகுத்து வந்தார்கள். ஊர்வலத்தில் நூற்றுகணக்கான செங்கொடி ஏந்தி கோஷமிட்டுக்கொண்டு வந்தார்கள். காரனூர், ராஜப்பையன் சாவடி, நீடாமங்கலம் பகுதியிலிருந்தும் விவசாயப் பெருங்குடி மக்கள் கிராமிய நடனங்கள், குறவன் குறத்தி ஆட்டபாட்டங்களுடன் ஊர்வலமாக ஹரித்திரா நதி வழியாக வந்தார்கள்.

கருவாக்குறிச்சி, ஆலங்கோட்டை, 141 நெம்மேலி, அத்திக்கோட்டை பகுதி விவசாயப் பெருங்குடிமக்கள் செங்கொடிஏந்தி வீரநடை போட்டு வந்தார்கள்.

வடுவூர் பகுதியில் இதுவரை கண்டிராத அளவில் விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் அணி திரண்டனர். கோட்டூர், இருள் நீக்கி, குன்னியூர், ஆதிச்சபுரம் கோட்டூர், திருக்களார், களப்பால் பகுதிகளிலிருந்து விவசாயப் பெருங்குடிமக்கள் கீழப்பாலம் வழியாக ஊர்வலமாக வந்தார்கள்.

தென்பாதி, சோழபாண்டி ஏத்தக்குடி, தலையாமங்கலம் பகுதியிலிருந்து செங்கொடி ஏந்தி விண்ணதிரும் கோஷங்களுடன் ஊர்வலங்கள் வந்தன.

அரிச்சபுரம், மேலத்தொட்டி, தேவன்குடி, மேலவளந்தான் சேரி, கீழவளந்தான் சேரி, கற்கோவில், கருவேலங்குளம் முதலிய ஊர்களிலிருந்தும் உறுமி மேள ஆட்டபாட்டங்களுடன் ஊர்வலங்கள் வந்தன. பெண்களும் திரளாக இதில் பங்கு கொண்டனர்.

### பொதுக்கூட்டம்

ஊர்வல முடிவில் மாபெரும் பொதுக்கூட்டம் ஆரம்பமாயிற்று. இதில் 10 000-க்கு மேற்பட்ட மக்கள் கலந்து கொண்டனர். தோழர் பி. எஸ். தனுஷ்கோடி எம். எல். ஏ தலைமை வகித்தார். தோழர்கள் ஏ. கே. கணேசன், ஆர். ரெங்கன், பி. வெங்கடேசன், ஏ. நடராஜன், பாரதி மோகன் எம். எல். ஏ, கே. ஆர். ஞான சம்பந்தம் எம். எல். ஏ, என். சங்கரய்யா எம். எல். ஏ. பேசினர்.

### "தீக்கதிர்" சிறப்பு மலர்

"தீக்கதிர்" டிசம்பர் 24-ம் தேதியிட்ட அடுத்த இதழ் தமிழ்நாடு விவசாயிகள் சங்க மாநாட்டின் சிறப்பிதழாக பல அரிய கட்டுரைகள் தாங்கி வெளிவரும்.

பக்கங்கள்: 12 விலை: 25 காசு

## கட்சித் தோழர்களுக்கு அறிவிப்பு

கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட அராஜகவாதிகளில் சிலர் கட்சிக் கொடியையும், கட்சியின் பெயரையும் பயன்படுத்தி நம் கட்சியை எதிர்த்துப் பிரச்சாரம் செய்யும் சில நோட்டீசுகளை வெளியிட்டுள்ளார்கள். உதாரணமாக எம். லிங்கசாமி என்ற கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட நபர் இன்னும் சிலரது பெயர்களையும் சேர்த்துக் கொண்டு "உடுமலை தாலுக்கா கமிட்டி" என்ற ஒரு அனுமதேய கமிட்டியின் பெயரில் தாங்கள்தான் கட்சி என்று உரிமை கொண்டாடிக் கொண்டு, நம் கட்சியின் கோவை மாவட்டக் கட்சி தலைவர்கள் சிலரை கட்சியிலிருந்து வெளியேற்றி விட்டதாகவும் நோட்டீசு வெளியிட்டுள்ளார்கள். இத்தகைய கட்சி விரோதிகள் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் நம் கட்சியை எவ்வாறு சீர்குலைக்க முயற்சி செய்கிறார்களோ அதே போன்று பகிரங்கமாக கட்சி எதிர்ப்பு வேலைகளில் ஈடுபட்டுள்ளார்கள். நம் கட்சியைச் சீர்குலைத்து முதலாளித்துவ வர்க்கத்திற்கு சேவை செய்ய முன் வந்துள்ள சீர்குலைவாளர்கள் இவர்கள்.

இத்தகைய கட்சி எதிரிகளின் சீர்குலைவு வேலைகளை அம்பலப்படுத்தி நம் கட்சித் தோழர்கள் உறுதியாக முறியடிக்க வேண்டும்.

**எம். சி. ஜெயப்பிரகாசம்**

**கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்**

மேற்கூறிய கட்சி விரோத அராஜகக் கும்பலுடன் சேர்ந்து கொண்டு கட்சி விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டதற்காகவும் பகிரங்கமாக கட்சிக்கெதிராக நோட்டீசு வெளியிட்டதற்காகவும் முன்பு ஸ்ரீவில்லிபுத்தூர் தாலுக்கா கமிட்டியின் செயலாளராக இருந்த எம். சி. ஜெயப்பிரகாசம் என்பவர் கட்சியிலிருந்து விலக்கப்பட்டுள்ளார் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

தமிழ் மாநில கமிட்டி
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி
(மார்க்சிஸ்ட்)

# பெரும் தொழிற்சாலைகளுக்கு மின்சார கட்டணத்தை உயர்த்துக

# நடுத்தர மக்களுக்கும் விவசாயத்துக்கும் கட்டணத்தைக் குறைக்க வேண்டும்

## சட்ட மன்றத்தில் தோழர் என். சங்கரய்யா கோரிக்கை

*தமிழக சட்ட மன்றத்தில் மின்சார கழகத்தின் 1967—68-ம் வருட நிதி நிலை அறிக்கை மீது நவ. 26-ம் தேதி நடைபெற்ற விவாதத்தில் தோழர் என். சங்கரய்யா ஆற்றிய உரையை கீழே பிரசுரிக்கிறோம்.*

ரூ. 300 கோடிக்கு மேல் முதலீடு செய்யப்பட்டிருக்கிற இந்தத் தொழிலில் 1966-67ம் ஆண்டில் 6·6 சதவிகித ஆதாயமே கிடைத்திருக்கிறது. இத்தொழிலின் முக்கியத்துவத்தைக் கருதியும் பொதுத் துறையில் மாநில அரசு நடத்தும் மிகப் பெரிய தொழிலாக இது இருப்பதைக் கருதியும் ஆண்டுக்கு ஒரு முறை சட்ட மன்றத்தில் விவாதிப்பதற்குப் பதில் அடிக்கடி விவாதித்து ஆலோசனைகள் பெற சட்ட மன்றத்தின் நிலையான நிரத்தரக் கமிட்டியை அமைத்தால் மின்சாரக் கழகம் செம்மையாக வேலைகளைச் செய்ய பயனுள்ளதாக இருக்கும்.

### பெரிய தொழிற்சாலைகளுக்கு மின்சார கட்டணம்

பெரும் தொழில்களைப் பொறுத்தவரை உயர் அழுத்த மின்சாரத்துக்கு குறைந்த கட்டணம் வசூலிக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டது. இது சரியல்ல. பெரும் தொழில்களில் அதிக லாபம் சம்பாதிக்கும் நிலைமை இருப்பதால்மற்ற தொழில்களைச் சேர்ந்தவர்கள் கொடுக்கக் கூடிய அதே கட்டணத்தை பெருந்தொழில்களைச் சேர்ந்தவர்களும் கொடுக்க முடியும்.

குறைந்த அழுத்த மின்சாரத்தைப் பொறுத்த வரையில் விவசாயத்துக்கு எட்டே கால் காசுக்குக் குறைத்துக் கொடுக்கமுடியாது என்று கூறப்பட்டது. பெரும் அளவு நிலம் வைத்திருப்பவர்களுக்கு கட்டணம் சற்று அதிகமாக வசூலிக்க வேண்டும். மத்தியதர, சாதாரண மக்களுக்கு குறைந்த கட்டணம் விதிக்க வேண்டும்.

கிராமபுற ஏழை மக்கள் வீடுகளுக்கு மின்சாரக் கட்டணத்தில் சலுகை காட்ட வேண்டும்.

### காண்ட்ராக்ட் வேலையை நீக்கவும்

மின்சார கழகம் பல்லாயிரக் கணக்கான ஊழியர்கள் பணியாற்றக் கூடியதாக இருப்பதால் இந்த இலாகாவே சகல வேலைகளையும் செய்வது சரியான முறையாக இருக்கும். காண்ட்ராக்ட் வேலை முறைகளை நீக்கி விடுவது மிகவும் அவசியம்.

### பல்புகள் பற்றுக்குறை

உள்ளாட்சி மன்றங்களில் உள்ள தெரு விளக்குகளுக்கு பல்புகள் இல்லாத குறையுள்ளது. செப்புக் குமிழ்கள் உற்பத்தி செய்ய முடியாததாலும் போதிய சப்ளை செய்ய முடியவில்லை என்று கூறப்பட்டது. இதற்கு மின்சார கழகம் முயற்சி செய்தால் அல்லது மாநில அரசு தொழில் உற்பத்தியாளருக்கு ஊக்கம் அளித்தால் பல்புகள் பற்றுகுறையை போக்கிவிட முடியும்.

### ஹரிஜன குடியிருப்புகளுக்கு மின் இணைப்பு

ஹரிஜன குடியிருப்புகளுக்கு மின் இணைப்புக்கு மாநில அரசாங்கம் ரூ. 3 லட்சம்தான் ஒதுக்கியுள்ளது. இதனுல் 300 என்றிருப்பதை மூன்று மடங்காக உயர்த்த வேண்டியது அவசியமாகும்.

### விரயம்

1965-66 ம் வருட மின்சார கழக அறிக்கையில் மொத்த மின்சார உற்பத்தி 398 கோடி யூனிட் என்றும் இதில் விற்பனை ஆகக் கூடியது 330கோடி யூனிட் என்றும் செலுத்துதல் வினியோகித்தல் முறையில் 68 கோடி விரயமாகிறது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது பெருமளவு விரயமாகும். இதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

### வட்டி விகிதம்

1967-68 ம் ஆண்டில் மின்சார கழகம் வாங்கிய கடனுக்கு அரசாங்கத்துக்கு ரூ. 9 கோடி வட்டியாகச் செலுத்தியிருக்கிறது. 1965-66 ல் 6·1 சதவிகிதமாக இருந்த வட்டி படிப்படியாக உயர்ந்து 1966-67-ல் 6·6 சதவிகிதமாகியிருக்கிறது. 1967-68-ல் 44 கோடி ரூபாய் ரெவின்யூ கணக்கில் ரூ. 11 கோடி வட்டியாக செலுத்தப்படுகிறது. இது கால் பங்கு ஆகும். இந் நிலையில் மின்சார கழகம் போன்ற பொதுத் துறை நிறுவனம் எப்படி வளர்ச்சியடைய முடியும்.

### இடைக்கால நிவாரணம் தருக

மின்சார கழகத்தில் வேலை செய்பவர்களுக்கு சம்பள விகிதங்களை பின்னர் ஆய்வு செய்தாலும்கூட இப்பொழுது இடைக்கால நிவாரணம் கொடுக்க வேண்டும். நகரத்தில் மற்றவர்களுக்கெல்லாம் தரப்படுவதுபோல் நகர ஈட்டுப்படியையும் கொடுக்க வேண்டும். 1967-68 ம் ஆண்டுக்கு பிராவிடண்ட் பண்டு பென்ஷனுக்கு ரூ. 13,93000 ஒதுக்கப்பட்டிருப்பது போதாது. கல்விச் செலவுக்கு வெறும் ரூ. 2000 தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

நாமினல் மஸ்டர் ரோல் பிரிவில் இருப்பவர்களை ஒ. எஸ். எஸ் பிரிவில் சேர்க்க வேண்டும் என்பது நீண்ட நாள் கோரிக்கை. காஷுவல் லேபர் பிரிவில் இருப்பவர்கள் பிரச்னையும் மனிதப் பிரச்னையாகும். 6 மாதம் ஆனவர்களை நிரக்தரமாக்கினுல்தான் தொழிலாளருக்கு நம்பிக்கை ஏற்படும். வெளியில் வேலை செய்கிற ஊழியருக்கு மின்சார கழகத்தின் தலைமைப் பீடத்தில் வேலை கொடுக்க வேண்டும் என்ற நீண்ட நாள் கோரிக்கையையும் கவனிக்க வேண்டும். ஊழியர்கள் சம்மேளனக் கூட்டுக் காரியதரிசி திரு. எஸ். ஆர். நீலகண்டனை திரும்ப வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நீதி மன்றம் தீர்ப்பளித்தும் மின்சாரக் கழகம் அப்பீல் செய்துள்ளது. அப்பீலை ரத்து செய்து மீண்டும் அவரை வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஷாப் ஆக்ட், எஸ்டாபிலிஷ்மென்ட் ஆக்ட் ஆகியவற்றை மின்சார கழக தொழிலாளர்களுக்கும் விஸ்தரிக்க வேண்டும். இந்த பொதுத் துறை நிறுவனம் தனிப்பட்ட முதலாளிகளுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும்.



# மின்சாரக் கழக தலைவருடைய பதவி காலத்தை நீடிக்கக் கூடாது

# நெய்வேலி அனல் மின் நிலையம் தமிழக அரசிடம் இருக்க வேண்டும்

## சட்ட மன்றத்தில் என். வரதராஜன் கோரிக்கை

தமிழக சட்ட மன்றத்தில் நவ. 25 ம் தேதி மின்சார கழக நிதிநிலை அறிக்கை மீது தோழர் என். வரதராஜன் ஆற்றிய உரை வருமாறு :—

மின்சாரத் துறையில் மற்ற மாநிலங்களைவிட தமிழகம் முன்னேறியுள்ளது. கிராமப்புற விவசாயிகள் மேலும் மின்சாரத்தை உபயோகிக்கத் தக்கவாறு அபிவிருத்தி காண வேண்டும். கிராமங்களில் இன்று மனுக்கள் போட்டு பல ஆண்டுகளாகியும் மின்சாரம்கிடைப்பதில்லை. சில கிராமங்களுக்கு முன்னுலேயே கொடுத்து விடுகிருர்கள். என் தொகுதியிலுள்ள நாகையன் கோட்டை எம். களத்தூர் கிராமங்களுக்கு மனுப் போட்டு நாலைந்து வருடங்கள் ஆகியும் இணைப்புக் கிடைக்கவில்லை. பாளையம் பகுதியில் சாங்ஷன் ஆகியும் இணைப்புக் கொடுக்கவில்லை. இதனுல் உற்பத்தி பாதிப்பும், மனச்சோர்வும் ஏற்படுகிறது.

மாவட்ட அபிவிருத்தி மன்மன்றக் கூட்டங்களில் இரண்டு மணி நேரத்தில் எல்லா பிரச்னைகளும் வருவதால் ஒவ்வொரு வட்டாரத்திலும் மின்சார ஆலோசனைக் குழுக்களை நியமித்தால் குறைகளும் ஊழல்களும் நேராவண்ணம் பார்த்துக் கொள்ள முடியும்.

மின்சார போர்டில் தொழிலாளர் பிரதிநிதி ஒருவரையும் சேர்த்துக் கொண்டால் தொழில் வளர்ச்சிக்கு உதவிகரமாக இருக்கும்.

மின்சார கழகத்தினுல் பல ஒப்பந்தங்கள் அமுலாக்கப்படவில்லை என்று கூறப்படுகிறது. தனிப்பட்ட முதலாளிகள் நீதி மன்றங்கள் போக முடியும். ஆனுல் சிப்பந்திகளுக்கோ வாழ்வே நாசமாகும் நிலைமை உள்ளது.

பழி வாங்கப்பட்டவர்கள் பட்டியல் தொழிற் சங்கத்தால் தரப்பட்டுள்ளது. அவர்களைப் பழி வாங்கி மின்சாரக் கழகம் அபிவிருத்தி அடைய முடியாது. அவர்களுடைய பிரச்னையை புதிய அரசு பரிசீலிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மின்சாரக் கழகத்தின் தலைவருடைய பதவிக் காலத்தை அரசு ஓராண்டு நீடித்திருக்கிறது. அவருடைய நிர்வாகத்தில் பலர் பழி வாங்கப்பட்டிருக்கிருர்கள். பல நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கின்றன. அப்படியிருந்தும் பதவி காலத்தை நீடித்தது சரியாகாது.

வீட்டு, உபயோகத்துக்கான மின்சாரத்துக்கு கட்டணம் 2 காசு உயர்த்தப்பட்டிருக்கிறது. கொஞ்சமும் நியாயமல்ல.

நெய்வேலியிலிருந்து அதிக மின்சாரம் கொடுக்கத் தயார் என்றும் ஆனுல் அதிக விலை கொடுக்க வேண்டும் என்றும் நாடாளு மன்றத்தில் மத்திய அரசாங்க அமைச்சர் அறிவிக்கிருர். நெய்வேலி அனல் மின்சார நிலையம் தமிழக சர்க்காரிடத்தில் இருக்க வேண்டும் என்று வற்புறுத்த வேண்டிய காலம் வந்து விட்டது. மத்திய சர்க்காரிடம் சண்டை போடவேண்டிய அவசியத்தில் இருக்கிறோம்.



**தீக்கதிர்**

### நன்கொடை

சென்னையில் டிச. 10-ம் தேதி நடைபெற்ற கேசவன் - பேபி திருமணத்தின்போது "தீக்கதிர்" வளர்ச்சிக்கு ரூ. 5 நன்கொடை அளிக்கப்பட்டது.



முகவரி மாற்றம் :

**கே. ஆர். ஞானசம்பந்தம்**
**எம். எல். ஏ.**

1-17, வடக்குத் தெரு,
சிக்கல் போஸ்டு,
நாகப்பட்டிணம் தாலுக்கா,
தஞ்சை மாவட்டம்.

**"தீக்கதிர்" சந்தா விபரம்**

ஓராண்டு ரூ. 10 அரை ஆண்டு ரூ.5-0
தனிப் பிரதி 20 காசு

# மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை மீறுவதுதான் ஜனநாயகமோ?

## நாடாளு மன்றத்தில் ஏ. கே. ஜி. பேச்சு

## கட்சி மாறுபவர்களை காங்கிரஸ் ஆதரிப்பதேன்?

*மேற்கு வங்க கவர்னரை பதவிலிருந்து நீக்கக் கோரி நாடாளுமன்றத்தில் டிசம்பர் 4-ம்தேதி கொண்டுவரப்பட்ட பிரேரணைமீது தோழர் ஏ. கே. கோபாலன் நிகழ்த்திய பேச்சைக் கீழே பிரசுரித்துள்ளோம்.*

மே.வங்கத்தில் அஜய் முகர்ஜி அமைச்சரவை கவிழ்க்கப்பட்ட நிகழ்ச்சி வெட்கமற்ற முறையில் அரசியல் சட்டத்தின் விதிகளை மீறிய செயலாகும். அமைச்சரவைக்குப் பெரும்பான்மைப் பலம் இல்லை என்று தான் கருதுவதால் மட்டும் அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்வதற்கு அரசியல் சட்டத்தின் கீழ் கவர்னருக்கு அதிகாரம் கிடையாது.

இந்திய அரசியல் சட்ட நிலைக்கு சுப்ரீம் கோர்ட் தெளிவான விளக்கம் கொடுத்துள்ளது. 1955 ல் சுப்ரீம் கோர்ட்டில் ஏகமனதாக அளிக்கப்பட்ட தீர்ப்பில் கவர்னர் வெறும் அரசியல் அமைப்புத் தலைவர்தான் என்று குறிப்பிடப்பட்டது. அத்தீர்ப்பில் பிரதம நீதிபதி மேலும் கூறியதாவது:

“நாம் இங்கிலாந்தில் இருப்பதைப் போலவே நாடாளு மன்ற நிர்வாக முறையை வைத்திருக்கிறோம். பிரிட்டிஷ் அமைச்சரவையைப் போலவே சட்ட மன்ற உறுப்பினர்கள் அடங்கிய அமைச்சரவையைப் பெற்றிருக்கிறோம்.”

அரசியல் சட்டத்தின் 164 (1), 164 (2) பிரிவுகளுக்கு விளக்கத்தை நாம் தீர்மானிக்க வேண்டும். அவை அமைச்சரவை மாநிலச் சட்ட மன்றத்துக்குக் கூட்டாகப் பொறுப்பு வகிக்கின்றன என்று தெளிவாகக் கூறுகின்றன. அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற விவாதத்தைப் பார்க்கும்போது பிரதானமாக அமைச்சரவைதான் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றத்துக்குப் பொறுப்பு என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். கவர்னர் மட்டுமே, ஜனாதிபதியின் பிரதிநிதி மட்டுமே. இறுதிவார்த்தை கூறுகிறவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே. இந்த விளக்கத்தை உள்துறை அமைச்சர் ஏற்று கொள்ளுகிறாரா என்று நான் அறிய விரும்புகிறேன். அப்படி ஏற்று கொள்ளுவாரானால் மேற்கு வங்க அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது சட்ட விரோதமான நடவடிக்கையாகும்.

### மக்கள் நிலை

இன்றைய நிலைமை மாறியுள்ளதை இந்தச் சபையும் அரசாங்கமும் நினைவில் கொள்ள வேண்டும். மாநிலங்கள் அவற்றிற்குரிய அந்தஸ்தைப் பெற்றுள்ளன. மேற்கு வங்கத்தில் கையாளப்பட்டது போன்ற எதேச்சதிகாரமுறை கையாளப்படுமானால் அது நம் அரசியல் சட்டத்தின் அடிப்படையையே அபாயத்துக்குள்ளாக்கும்.

மற்றொரு விஷயத்தையும் இந்தச் சபையின் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன். நாம் அரசியல் சட்டத்தையும், நீதி மன்றத்தையும், சட்ட மன்றத்தையும் மட்டுமே விவாதித்துக்கொண்டிருக்கிறோம். ஆனால் மக்களுடைய நிலை என்ன? ஜனநாயகத்தில் மக்களுக்குத்தான் உயரிய அதிகாரம் இருக்கிறது. அவர்களுடைய பாத்திரம் என்ன? ஒரு மாநில சட்ட மன்றத்துக்கோ நாடாளு மன்றத்துக்கோ உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதுடன் அவர்களுடைய பாத்திரம் முடிந்து விடுகிறதா அல்லது அதற்குப் பிறகு சட்ட மன்றமோ நாடாளு மன்றமோ இயங்கி வரும் மூன்று அல்லது ஐந்து வருட காலத்துக்கு அவர்களுக்கு ஏதாவது அதிகாரம் இருக்கிறதா? நம்முடைய அரசியல் சட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியை வாபஸ் பெறுவதற்கு விதி இல்லை என்பது உண்மையே. ஆனால் சில அடிப்படைகள் மீது உறுப்பினர்களை மக்கள் தேர்ந்தெடுத்துள்ளார்கள். அமைச்சரவை பெரும் பான்மைப் பலத்தை இழந்து விட்டதாக பலர் குறிப்பிட்டார்கள். எவ்விதம் பெரும்பான்மை பலத்தை இழந்து விட்டார்கள்? எவ்விதம் தேர்தல் நடத்தப்பட்டது? ஒரு திட்டம் அல்லது கொள்கையின் அடிப்படையில் தேர்தல் நடத்தப்பட்டது. சுயேச்சையாளர் கூட சில கொள்கைகளை ஆதரித்தார்கள். பல கட்சிகள் போட்டியிட்டன. இவற்றிடையே தத்துவார்த்த வேறுபாடுகளும் இருந்தன. ஆனால் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்ட ஐக்கிய முன்னணிக் கட்சிகளிடம் ஒரு விஷயம் பொதுவாக இருந்தது. “சட்ட மன்றத்துக்குள் காங்கிரசை எதிர்ப்போம், காங்கிரசின் ஏக போகத்தை எதிர்த்துப் போராடுவோம் காங்கிரசின் திட்டத்தையும் கொள்கையையும் எதிர்த்துப் போராடுவோம்” என்பதே அந்தப் பொதுவான கொள்கையாகும். அந்தக் கொள்கையை எல்லா கட்சிகளும் ஒப்புக் கொண்டன. அதனடிப்படையில் மக்களால் அவை தேர்ந்தெடுக்கப்பட்டன. ஆனால் இந்த 18 பேரைப் பொறுத்தவரை—இவர்களில் 11 பேர் ஏற்கனவே அமைச்சர்களாகி விட்டனர், மீதி நாலைந்து பேரும் அமைச்சர்களாகப் போகின்றனர் — இவர்களுக்கு மக்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவதற்கு எந்த உரிமையும் கிடையாது. ஏனெனில் தேர்ந்தெடுத்த மக்கள் அவர்களுக்குக் கொடுத்த கட்டளை காங்கிரசை எதிர்க்க வேண்டும் என்பதேயாகும். அவர்களைத் தேர்ந்தெடுக்கும்போது சில கொள்கைகளை அவர்கள் பற்றி நிற்கவேண்டும் என்று தான் மக்கள் கட்டளை யிட்டனர். அக்காரணத்தால்தான் அவர்கள் ஐக்கிய முன்னணியில் இருந்தனர். மக்களுக்கு வாக்களித்த கொள்கையைப் பின்பற்ற முடியாது என்று அவர்கள் கருதுவார்களேயானால் உடனே மக்களிடம் திரும்பச் சென்று கொள்கையை மாற்றி கொள்ளுவதற்கான காரணத்தை விளக்க வேண்டும். பின்னர் அவர்கள் கொள்கையை மாற்ற முடியுமா அல்லது முடியாதா என்று மக்கள் கூறுவார்கள். தேர்தலுக்குப் பிறகு தங்களுடைய கோலத்தை மாற்றி கொண்ட டாக்டர் கோஷும் மற்றவர்களும் மக்களிடம் திரும்பச் செல்லுவார்களேயானால் ஜாமீன் தொகையை இழப்பார்கள். அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட மாட்டார்கள். தேர்தல் சமயத்தில் சில வாக்குறுதிகளை கொடுத்ததாகவும் சட்டமன்றத்தில்காங்கிரசை எதிர்க்க வேண்டும் என்ற கட்டளையை மக்கள் கொடுத்ததாகவும் ஆனால் இன்று அதைச் செய்ய முடியாது என்று கருதுவதாகவும் அவர்கள் மக்களிடம் கூறி பார்க்கட்டும், அதற்கான காரணங்களையும் கூறட்டும். அதனடிப்படியில் சட்டமன்றத்துக்கு திரும்பவும் தேர்ந்தெடுப்பதற்கு முயற்சி செய்யட்டும். மக்களுக்குத் தான் உயரிய அதிகாரம் இருக்கிறது. அவர்களுக்கு அதிகாரம் அளித்தது மக்களேயொழிய கவர்னரல்ல. தேர்தலுக்கு நின்றதற்காகவே அவர்களை மக்கள் தேர்ந்தெடுக்கவில்லை. சில கொள்கைகளுக்காகவே அவர்களைத்தேர்ந்தெடுத்தார்கள். “எங்களை நீங்கள் தேர்ந்தெடுத்தால் இதை நாங்கள் செய்வோம்” என்று மக்களிடம் கூறியதற்காகத் தேர்ந்தெடுத்தார்கள். தேர்தல் நடந்த சமயத்தில் காங்கிரசை ஆதரிக்கப் போவதாக அவர்கள் மக்களிடம் கூறவில்லை. அவர்கள் அப்படி கூறியிருந்தால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க மாட்டார்கள். இப்போது தேர்தலுக்குப் பிறகு ஐந்தாண்டுகளுக்குள் அவர்கள் கொள்கைகளை மாற்றிக் கொண்டு விரும்பும் எந்தக் கொள்கையையும் கடைப் பிடிக்கமுடியாது. அது மக்களைக்காட்டிக்கொடுப்பதாகும் துரோகம் செய்வதாகும். மக்கள் கட்டளைகளுக்கு மாறாகச் செல்வதாகும்.

மிகமுக்கியமான விஷயம் இதுதான். ஒரு உடன்பாட்டின்மீது இந்த 18 பேரும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தேர்தல் சமயத்தில் அவர்கள் மக்களுக்குச் சில வாக்குறுதிகளைக் கொடுத்தார்கள். ஒருநாள் திடீரென்று அவர்கள் கட்சி மாறி விட்டோம் என்றும் வேறொரு கட்சியில் சேருகிறோம் என்றும் அல்லது வேறொரு கொள்கையைப் பின்பற்றுகிறோம் என்றும் கூற முடியாது. ஆகவே இது மெஜாரிடி பற்றிய பிரச்னையல்ல அல்லது ஒரு கோஷ்டி இன்னொன்றுடன் சேர்வது பற்றிய பிரச்னை அல்ல. சில கொள்கைகளுக்காக நிற்பதாகக் கூறியதின் பேரில் அவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனால் இப்போது அதற்குமாறான கொள்கைகளுக்காக நிற்பதாகக் கூறினால் அது மக்களை ஏமாற்றுவதாகும். மக்கள் கொடுத்த கட்டளைக்கு மாறாச் செல்லுவதாகும். அவர்கள் கொள்கையை மாற்றிகொள்ள விரும்பினால் முதலில் மக்களிடம் சென்று தங்களுடைய கருத்துக்களைக் கூறி மக்களிடமிருந்து புதிதாகக் கட்டளை பெற வேண்டும்.

மத்தியப் பிரதேசத்தைப் பொறுத்தவரை உறுப்பினர்கள் செய்ததுபோல் நடக்க அரசாங்கம் ஏதாவது செய்திருக்க வேண்டும். அதை அவர்கள் செய்யக் கூடாது என்று நான்கூறவில்லை. ஆனால் கேள்வி இது தான். ஜனநாயகத்தில் உயர்ந்த அதிகாரம் யாருக்கு? கவர்னருக்கா? சுப்ரீம் கோர்ட்டுக்கா? அல்லது சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் அவர்களை சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுத்த மக்களுக்குமா? மக்களுடைய கட்டளையும் தீர்ப்பும்தான் ஜனநாயகத்தில் மதிக்கப் படவேண்டும். மக்களுடைய தீர்ப்பும் விருப்பமும்தான் ஜனநாயகத்தில் உயர்வானது. மக்கள் சிலகட்டளைகளைகொடுத்துதேர்தலுக்குப்பின் ஐந்து வருடங்களுக்குள் அதற்கு மாறாகச் சென்றால் ஜனநாயகத்துக்கு அர்த்தமில்லாமல் போகும். நிச்சயமாக ஜனநாயகம் அது வல்ல. ஜனநாயகம் என்றால் மக்கள் விருப்பம் என்று பொருள்.

இருதரப்பும் ஜனநாயகத்தை அழிப்பதாக கிருபாளனி கூறினார். ஜனநாயகம் என்றால் என்ன என்று அவரும் கேட்டார். இந்த நாட்டில் ஜனநாயகத்தின் தரத்தையும் அது அனுஷ்டிக்கப்படும் விதத்தையும் நாம் பார்ப்போம். ஜனநாயகத்தரம் 1953-ல் ஒருவிதமாக இருந்தது. 1954-ல் இன்னொருவிதம் 1957-ல் வேறொரு விதம், 1959-ல் இன்னுமொரு விதம். ஹரியனாவில் உறுப்பினர்கள் அடிக்கடிக் கட்சி மாறி கொண்டிருக்கிறார்கள். ஆகவே அரசாங்கத்தை நடத்த முடியாது என்று கூறினார்கள். ஆகவே மெஜாரிடி இருந்த போதிலும் அரசாங்கம் டிஸ்மிஸ் செய்யப்பட்டது. ஆனால் வங்கத்தில் செய்ததென்ன? வங்கத்தில் கட்சி மாறுவதற்கு ஆசை காட்டப் பட்டது. கட்சி மாறுகிறவர்களைப் பார்த்து “நீங்கள் மாறினால் நீங்கள் டிஸ்மிஸ் செய்யப்படாமல் இருப்பது மட்டுமின்றி உங்களுக்கு மந்திரி பதவியும் பரிசாகக் கிடைக்கும்” என்று கூறப்பட்டது. ஆகவே ஓரிடத்தில் கட்சி மாறுவதற்குப் பரிசு கிடைக்கிறது. இன்னொரு இடத்தில் அதற்காக அவர்கள் டிஸ்மிஸ் செய்யப்படுகின்றனர்.

### கேரளத்தில் நடந்ததென்ன?

1959-ல் கேரளத்தில் நடந்ததென்ன? அப்போது அந்த மாநிலத்தில் ஆட்சியிலிருந்த அரசாங்கம் பெரும்பான்மை பலம் பெற்றிருக்கவில்லை என்று கூறமுடியுமா? என்றாலும் பிரதம மந்திரி விடுதலைப் போராட்டத்தை நடத்தினர். அரசாங்கம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும் ஆட்சியிலிருந்து இரண்டு வருட காலத்தில் மக்களிடம் செல்வாக்கையும் ஆதரவையும் இழந்து விட்டது என்று கூறப்பட்டது. அதற்கு எப்படி விளக்கம் கொடுக்கிறீர்கள்? அப்போது சட்டமன்றத்தில் மெஜாரிடிப் பிரச்னை வரவில்லை. சட்டமன்றத்தில் அரசாங்கம் உறுதி

(8-ம் பக்கம் பார்க்க)

# கம்யூனிஸ்ட் கட்சிமீது தடை என்று பேசுவதின் பொருள் என்ன ?

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

புறுத்தி அவர்களுக்காகப் போராடி அவர்களது அன்பை மேலும் பெற்றிருக்கிறோம். தஞ்சை விவசாயத் தொழிலாளிகள் போராட்டம், உணவுக்கான இயக்கங்கள் முதலியவை கிராம மக்களிடமும் நமது நிலையை வலுப்படுத்தியுள்ளது. சட்டசபையிலும், பாராளுமன்றத்திலும், நமது பிரசாரத்திலும் ஒவ்வொரு பிரச்சினையிலும் நாம் கூறும் நல்லாலோசனைகள் மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன. நமது கட்சியின் அந்தஸ்து அகில இந்திய ரீதியில் உயர்ந்துள்ளதென்பதை அனைவரும் காண்கின்றனர். இவ்வளவுக்கும் பிறகு நம்மை அடக்குமுறை கொண்டு தீர்த்துக் கட்டிவிடலாமென்று நினைப்பவர்களுக்கு பொது மக்கள் நல்ல பாடம் கற்பிப்பார்கள்.

ஒன்று மட்டும் இறுதியாகக் கூறிவிட வேண்டும். (மார்க்சிஸ்ட்) கம்யூனிஸ்ட் கட்சிதானே தாக்கப்படுகிறதென்று இதர ஜனநாயகக் கட்சிகள் கருதினால் பெரும் ஏமாற்றமடைவார்கள். காங்கிரஸ் கட்சி முதலில் எங்களைத் தாக்கிவிட்டு, இந்தத் தாக்குதலுக்குப் பிற கட்சிகளையும் பயன்படுத்தி விட்டு, பிறகு அவர்கள் மீதும் பாயும் என்பதே சரித்திரம். உலகம் முழுவதும் ஜனநாயக சக்திகளை அழிக்க முற்படும் ஆளும் வர்க்கங்கள் முதலில் கம்யூனிஸ்டுகளைத் தாக்கி சிறைப்படுத்திவிட்டுப் பிறகு எல்லா மக்களின் மீதும் தாக்குதல்களை தொடுப்பார்கள் என்பதும் சரித்திரம். நமது மாநிலத்தில் காங்கிர்ஸ் அரசு இல்லாது செய்தனர் நமது தமிழக மக்கள். ஆனால் தி.மு.க. அரசையும் நம் மீது நடவடிக்கை எடுக்க காங்கிரஸ் மத்திய சர்க்கார் நிர்ப்பந்திக்கும். விசேஷ அதிகாரங்களைக் காட்டி தி. மு. க. அரசை அவமதித்தும் செயல்படத் துணியலாம். ஆளும் வர்க்கங்களின் நெருக்கடி அவ்வளவு தீவிரப்பட்டு வருகிறது. ஆனால் இவ்வாறு மத்திய அரசு ஏற்படுத்தும் நிர்ப்பந்தங்களுக்கு மாநில தி.மு.க. அரசு இடமளிக்காதென நம்புகிறோம். நமது மாநிலத்தில் அரசியல் கட்சிகளின் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாப்பதில் தி.மு.க. அரசு எச்சரிக்கையாயிருக்குமென எதிர்பார்க்கிறோம். தமிழகத்தின் முக்கிய அரசியல் கட்சி என்ற வகையில், தி.மு. கழகத்துக்கும் சரி, தி. மு. க. அமைச்சர்களுக்கும் சரி, காங்கிரஸ் கட்சியின் இந்த சதித் திட்டத்தை முறியடிப்பதில் பெரும் பொறுப்புமுண்டு.

அகில இந்திய ரீதியில் பிரச்சினை உருவாக்கப்பட்டு வருகிறதென்பது தெளிவாகத் தெரிகிறது. மேற்கு வங்கமும் கேரளமும் முதல் இலக்காக உள்ளன. ஆனால் காங்கிரஸ் சதித் திட்டம் இந்தியா முழுவதுமே செயல்பட்டு வருகிறது. தமிழகம் விதிவிலக்காக இருக்கப்போவதில்லை. அண்மையில் 'கம்யூனிஸ்ட் கட்சியைத் தடை செய்க' என்ற உருவத்தில் அது தீவிர சொரூபம் எடுத்துள்ளது. காங்கிரஸின் இந்த சதித் திட்டம் முறியடிக்கப்படவேண்டும்; நிச்சயம் முறியடிக்கப்படும். கம்யூனிஸ்ட் கட்சி சட்டபூர்வமாக வேலை செய்தால் வளருகின்றதென்று உணரும் ஆளும் வர்க்கங்கள் வெறிகொண்டு நம்மைத் தடை செய்யும்படி தங்களது கைக்கூலிகளை ஏவியுள்ளார்கள். ஆனால் சட்டவிரோதமாக்கப்பட்டாலும் இந்தக் கட்சி வளருமென்பது தான் அதன் வரலாறு என்பதையும் நம் எதிரிகள் உணரட்டும். எந்த நிலைமையிலும் மக்களின் ஆதரவுதான் நமது வளர்ச்சியை உறுதிப்படுத்தும் சக்தி. மக்களோடு நெருங்கிய உறவுள்ள வரை எந்த அடக்குமுறையும் நம்மை ஒன்றும் செய்துவிட முடியாது.

∴

## விவசாய மாநாட்டிற்கு மதுரை மாவட்டத்திலிருந்து 12 பஸ்கள்

டிசம்பர் 23, 24 தேதிகளில் திருவாரூரில் நடக்க இருக்கும் தமிழக விவசாய மாநாட்டில் கலந்து கொள்வதற்காக மதுரை மாவட்டத்திலிருந்து 12 பஸ்களில் பிரதிநிதிகளும், பார்வையாளர்களும் 24ந்தேதி காலையில் விவசாய அணிவகுப்பில் கலந்து கொள்ள வருகிறார்கள். அதன் விபரம் பின் வருமாறு;—

மதுரை நகரிலிருந்து 4 பஸ்கள், மதுரை தாலுக்காவிலிருந்து 1. திருமங்கலம் தாலுக்கா 1. மேலூர் தாலுக்கா 1. நிலக்கோட்டை தாலுக்கா 1. திண்டுக்கல் 1. பழனி தாலுக்கா 1. பெரியகுளம் தாலுக்கா 2. ஆக மொத்தம் 12 பஸ்களில் தொழிலாளர்களும், விவசாயிகளும் ஏனைய பார்வையாளர்களும் வருகிறார்கள்.

## விவசாய இயக்கத்தின் கோரிக்கைகள்!

∴ உழுபவனுக்கே நிலத்தைச் சொந்தமாக்குவோம்!

∴ உச்சவரம்புச் சட்டத்தின் விதிவிலக்குகளை ரத்து செய்க!

∴ மடங்கள், கோவில்களின் நிலங்களை நிலமில்லாதோருக்கு வழங்குக!

∴ நில வெளியேற்றத்தைத் தடை செய்க!

∴ தரிசு நிலங்களை ஏழை விவசாயிகளுக்குத் தருக!

∴ காட்டிலாகா தரிசுகளை ஏழை விவசாயிகளுக்குத் தருக!

∴ ஏழை விவசாயிகளின் கடன் வசூலை உடனே நிறுத்துக!

∴ விவசாயத் தொழிலாளரின் வீட்டு மனைகளை அவர்களுக்கே சொந்தமாக்குக!

∴ 10 ஏகருக்கு மேல் உபரி உற்பத்தியை கட்டாய கொள்முதல் செய்க!

∴ 3 ஏகருக்கு மேல் 10 ஏகர் வரை லெவி முறையில் கொள்முதல் செய்க!

∴ 3 ஏகருக்குக் கீழ் கொள்முதல் விலக்குத் தருக!

∴ விவசாயத் தொழிலாளருக்கு பாதுகாப்புச் சட்டம் வேண்டும்!

## சீர்காழி தாலுகா விவசாயிகள் மாநாடு

சீர்காழி தாலுகா விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் சங்க 17-வது மாநாடு செம்மங்குடியில் நவ. 20-ம் தேதி நடைபெற்றது. ஆண்களும் பெண்களும் 138 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மாநாட்டுக்குத் தோழர் எஸ். ஆர். நடேசன் தலைமை வகித்தார்.

தோழர்கள் பி. எஸ். தனுஷ்கோடி எம். எல். ஏ, ஏ. நடராஜன், வி. ஆர். செல்லப்பன், வி. எஸ். பொன்னுசாமி உரையாற்றினர். கே. ஆர். ராமமூர்த்தி தீர்மானங்களை பிரேரேபித்தார். பிரதிநிதிகள் விவாதத்துக்குப் பின் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

உச்சவரம்புச் சட்டத்தை திருத்தவேண்டும், விவசாயிகள் பாக்கிக்கு சிவில் கோர்ட் மூலம் நடவடிக்கை எடுப்பதைத் தடுக்க வேண்டும். பனங்காட்டாங்குடி வரை பஸ் வசதி செய்யவேண்டும். முக்கூட்டு மதகை சீர்திருத்த வேண்டும், விவசாயத் தொழிலாளர்களுக்கான மன்னை ஒப்பந்தத்தை அமுலாக்கவேண்டும்.

புதுத்துறை விவசாயிகளுக்கு ரௌடிகளை வைத்து தொந்தரவு கொடுப்பதைக் கண்டித்தும் தீர்மானம் இயற்றப்பட்டது.

புது வருடத்திற்கு கீழ்க்கண்ட நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் :—

எஸ்.ஆர். நடேசன் (தலைவர்) என். பி. நாகராஜன் (உபதலைவர், கே. ஆ. ராமமூர்த்தி (காரியதரிசி) எம். கோவிந்தன் (உபகாரியதரிசி) எஸ். கே. ஆதிமூலம் (பொக்கிஷதார்) மேலும் 10 நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

(7-ம் பக்கத் தொர்டர்ச்சி)

யான மெஜாரிடி பெற்றிருந்தது என்ற போதிலும் மக்களாதரவை அரசாங்கம் இழந்து விட்டதாகக் கூறி டிஸ்மிஸ் செய்யப்பட்டது. இன்று வங்கத்தில் நடப்பதென்ன? வங்கத்தில் ஆட்சியிலிருந்த அரசாங்கத்துக்கு மக்களாதரவு இல்லை என்றால் அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டதைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்ய நடைபெற்ற கூட்டத்துக்கு 15 லட்சம் பேர் வந்ததற்கு நீங்கள் என்ன விளக்கம் கொடுப்பீர்கள்? நீங்கள் இருவிதத் தரங்கள் வைத்திருக்கிறீர்கள். கேரளத்தில் ஆட்சியிலிருந்த கட்சிக்கு சட்டமன்றத்தில் மெஜாரிடி இருந்தபோது மக்கள் எழுச்சிபற்றி பேசினீர்கள்! வங்கத்தில் ராணுவமும் 144 தடையுத்தரவும் அடக்குமுறையும் ஊரடங்கு உத்தரவும் உள்ள போதே அங்கு நடைபெறுவதை நீங்கள்? என்னவென்று கூறுகிறீர்கள். அது மக்கள் எழுச்சி இல்லையா? ஊரடங்கு உத்தரவு உள்ளபோது மக்கள் எழுச்சி ஏற்பட்டிருக்க வில்லையா? 1959-ல் மக்கள் எழுச்சி என்று கூறி அமைச்சரவையை நீங்கள் டிஸ்மிஸ் செய்தீர்கள். மற்றொரு இடத்தில் நீங்கள் போலீசையும், ராணுவத்தையும் ஊரடங்கு உத்தரவையும் வைத்திருந்தாலும் அரசாங்கத்துக்கு எதிராக மக்கள் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். அந்த அரசாங்கத்தை நீங்கள் டிஸ்மிஸ் செய்ய வில்லை. மாறாக "அதற்கு ஆதரவளிப்போம்" என்கிறீர்கள். ஆச்சாரிய கிருபளானி காணும் ஜனநாயகம் இதுதான் என்றால் இந்த ஜனநாயகத்தை நாங்கள் எதிர்க்கிறோம். இந்த ஜனநாயகத்தை நாங்கள் அழிப்போம். ஏனெனில் இதன்படி ஜனநாயகம் என்றால் மத்தியிலுள்ள ஆளும் கட்சிக்கான வசதி என்றாகிறது.

இவ்வித ஜனநாயகம் காங்கிரஸ் கட்சி பதவியில் ஓட்டிக் கொள்ளுவதற்கான வசதியேயாகும். ஜனநாயகம் என்பதற்கு ஹரியானாவில் ஒரு அர்த்தம், ஜனநாயகம் என்பதற்கு வங்கத்தில் அரசாங்கம் ஆட்சியில் ஒட்டிக்கொள்ள ஒருவித வசதி என்றால் ஜனநாயகம் என்பதற்கு 1959-ல் கேரளத்தில், ஆட்சியில் ஒட்டிக் கொள்வதற்கான வசதி என்றால் பின்னர் அது இன்றும் முன்னரும் அனுஷ்டிக்கப்படுகிறமாதிரி ஆளும் காங்கிரஸ் கட்சி அதிகாரத்தில் ஒட்டிக் கொள்ளுவதற்கான வசதியே என்றால் இதுதான் ஜனநாயகம் என்றால் இதை எதிர்த்து நாங்கள் போராடுவோம். இந்த ஜனநாயகத்தை நாங்கள் அழிப்போம். இந்த ஜனநாயகத்தை நாங்கள் விரும்பவில்லை (குறுக்கீடுகள்)

அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்யுமாறு யாரும் மக்களைக் கேட்கக் கூடாதுதான். ஆனால் ஆளும் கட்சியிலுள்ளவர்களே அரசியல் சட்டத்தையும் ஜனநாயகத்தையும் ஸ்தம்பிக்க வைத்தால் அரசியல் சட்டத்தைக் களங்கப் படுத்தினால் நிச்சயமாக மக்கள் அரசாங்கத்தை ஸ்தம்பிக்க வைப்பார்கள். இதைத் தவிர அவர்கள் வேறெதுவும் செய்யமுடியாது.

கோஷ் அமைச்சரவையை ஒருநாள் கூட நீடிக்க அனுமதிக்கக் கூடாது என்று மேற்கு வங்க மக்கள் உறுதி பூண்டுள்ளனர். அவர்கள் ஓயப் போவதில்லை. கோஷ் அமைச்சரவையை நீடிக்க மத்திய அரசு அனுமதித்தால் ராணுவத்தைக் கொண்டும், போலீசைக் கொண்டும், 144 தடையுத்தரவைக் கொண்டும் அது நீடிக்க முயலும். மக்களனைவரும் ஏற்கனவே கிளர்ந்தெழுந்து விட்டார்கள். வங்கத்தில் மட்டுமின்றி மற்ற இடங்களிலும் என்ன நடக்கிறது என்பதை அரசாங்கம் புரிந்து கொள்ள முடியா விட்டால் நெருக்கடியிலிருந்து தப்பிக்க முடியுமா என்று அவர்கள் பார்க்கட்டும். ஆனால் அதை ஜனநாயகம் என்று மட்டும் அழைக்கவேண்டாம். பித்தலாட்டம் என்றோ வேறெவ்விதமாகவோ அழைத்துக் கொள்ளட்டும்.

## அரசியல் கட்சிகளுக்கு அமெரிக்கப் பணம்!

இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகளுக்கு அமெரிக்கப்பணம் எவ்வளவு கிடைத்துள்ளது என்ற விவரம் வெளிப்பட்டுள்ளது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் ஹை கமிஷனர் பிரிட்டிஷ் வெளிநாட்டிலாகாவுக்கு அனுப்பிய தந்தியில் கீழ் வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"முன்னாள் உ. பி. முதலமைச்சர் சி. பி. குப்தாவுக்கு ரூ. 15 லட்சம், சுதந்திரா கட்சிக்கு ரூ. 97 லட்சத்து 50 ஆயிரம் (மசானி மூலமாக), ஜனசங்கத்துக்கு ரூ. 85 லட்சம் தொகையை அமெரிக்கா வினியோகித்துள்ளது"

இதுபற்றி விசாரணை நடத்த உள்துறை அமைச்சர் சவாண் நாடாளுமன்றத்தில் மறுத்தார். ஆனால் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) மீது மட்டும் எந்த அவதூறும் பொழிகிறார்.

டைம்ஸ் பிரஸ் (153, டாக்டர் நடேசன் ரோடு சென்னை-5)ல் அச்சிட்டு, வெளியிடுபவர், ஆசிரியர் : கே. முத்தையா